# ஆயிரக் கணக்கிலே ஜனத்திரள்!

## ஜீவாவிற்குக் குதூகல வரவேற்பு


# ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

மலர் 4. இதழ் 8. | புதன்கிழமை 21—11—45 | விலை 2 அணா


[போட்டோ: K. V. ஸ்ரீராம்]



மதுரை ரயில்வே ஸ்டேஷனில் ஜீவாவை வரவேற்கக்கூடிய ஜனத்திரளில் ஒரு பகுதி.



திண்டுக்கல்லில் மாதர்கள் அணிவகுப்பு.



தோழர் ஜீவானந்தம்

மதுரை மக்கள் ஊர்வலத்தின் ஒரு தோற்றம்.

ஜீவா சென்றவிடமெல்லாம், "புதிய தமிழ் நாடு" என கோஷித்தார். எல்லாருக்கும் வேலை, உணவு, வீடு, கல்வி, ஓட்டுரிமை வழங்கக்கூடிய புதிய தமிழ் நாட்டைப்பற்றி முழங்கினார். தேச விடுதலைக்கு சுயநிர்ணய உரிமையை அங்கீகரிப்பது ஒன்றே வழி யென்றார். காங்கிரஸ்-லீக்-கம்யூனிஸ்டு ஐக்கிய அணியே ஆயுதமென்றார்.

மக்களனைவரும்-கட்சியினரனைவரும் சிந்திக்கத் தொடங்குகிறார்கள். புதிய விழிப்படைகிறார்கள். "வாழ்க ஜீவா! வெல்க உம் கட்சிக் கொள்கை!" என ஆசி கூறுகிறார்கள்.

மழைக் காலமானபடியால் பல்லாயிரக் கணக்கான மக்கள் அவருடைய பிரசங்கத்தைக் கேட்க முடியாது போயிற்று. எனினும் கொட்டும்மழையிலுங்கூட ஊர்வலங்களும் பொதுக் கூட்டங்களும் நடத்தினார்கள்.

### மதுரையில் 25,000 பேர்

மதுரை நகரிலுள்ள அத்தனை குதிரை வண்டிகளின் இருபுறங்களிலும் ஜீவாவின் வருகைபற்றிய போஸ்டர்கள் ஒட்டப்பட்டிருந்தன. 4-11-45 காலையில் ஜங்ஷனில் 4,000 தொழிலாளர்கள் கூடி ஜீவாவை வரவேற்றனர்.

மாலையில் ஊர்வலம். சாரட் வண்டியில் ஜீவாவும், கடந்த 6 வருடம் சிறைவாசத்திற்குப்பின் விடுதலையடைந்த தோழர் வி. ராமநாதனும் அமர்ந்து செல்ல, மாடு, ஏர் கலப்பை வண்டியுடன் விவசாயிகள் பின் செல்ல, கிராம வாத்தியங்களின் முழக்கத்தோடு ஊர்வலம் நகர்ந்தது. 200 பெண்கள், 500 பாலர்கள் உட்பட 10 ஆயிரம் பொதுமக்கள், 300 செங்கொடிகளேந்தி ஒரு மைல் நீள ஊர்வலமாக அணிவகுத்துச் சென்றார்கள். தொழிலாளிகளுக்கு அன்று திருவிழா தான்! இம்மாதிரியான ஊர்வலத்தை இதுவரை மதுரைமா நகரம் கண்டதில்லை. கம்யூனிஸ்ட் எதிர்ப்பாளர்கள் தம் அனுதாபிகளிடம் 'கம்யூனிஸ்ட் கட்சி ஒழிந்து விட்டதென்று' ஓதியிருந்ததால், அவர்களெல்லாம் செங்கொடிப் பட்டாளத்தைக் கண்டு திகைத்து நின்றார்கள்.

அன்று மழைமேகமாயிருந்ததால் கூட்டம் கூடுமுன் 10,000 பேர் மைதானத்திற்கு வந்துவிட்டுப் போய் விட்டார்கள். என்றாலும் கூட்டத்திற்கு 25 ஆயிரம் பேர் வந்திருந்தனர். 2¾ மணி நேரம் ஜீவா பேசினார். கரகோஷங்கள் விண்ணை முட்டின.

மீனாக்ஷி மில், மஹாலெக்ஷிமி மில் தொழிலாளர்களுக்கென பழங்கானத்தத்தில் 5000 பேரடங்கிய கூட்டமும் நடந்தது.

★

### திண்டுக்கல்லில் 10,000 பேர்

திண்டுக்கல்லில் தோல் பதனிடும் தொழிலாளர், பஞ்சாலைத் தொழிலாளர், ஹோட்டல் தொழிலாளர் தரகு மண்டி குமாஸ்தாக்கள், சுருட்டுத் தொழிலாளர்கள், மாணவர்கள், பாலர்கள் ஆகியவர்களின் சங்கங்கள் ஜீவாவை வரவேற்றன. 2,000 பேர்கொண்ட ஊர்வலமும், தோழர் பாலசுப்பிரமண்யம் தலைமையில் 10,000 பேரடங்கிய பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

★

### திருச்சியில் 10,000 பேர்

தோல் பதனிடும் தொழிலாளர் 6, 7 மைல் தூரத்திலிருந்து ஊர்வலமாக ஜீவாவைக் காணவந்தார்கள். குதிரை-மாட்டுவண்டித் தொழிலாளர்கள் தம் வண்டிகளுடன் ஊர்வலமாக வந்தார்கள். கைத்தறி, சுருட்டு, ரயில்வே தொழிலாளர்களும் ஊர்வலமாக வந்தார்கள்.

வழக்கமாக கூட்டம் கூடுகிற டவுன்ஹால் மைதானத்தில் காங்கிரஸ்காரர்களுக்கும் திராவிடக் கழகத்தாருக்குமிடையே நடைபெற்ற சச்சரவால் அங்கு கூட்டம் போட அனுமதியில்லை. அதனால் மற்றொரு குறுகிய இடத்தில் தெ. இ. ரயில்வே தொழிற்சங்கத் தலைவரும், தமிழ்நாடு கம்யூனிஸ்டு கட்சியின் மாகாணக் கமிட்டி மெம்பருமான தோழர் எம். கல்யாணசுந்தரத்தின் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. ஜீவா 2½ மணி நேரம் பேசினார்.

கம்யூனிஸ்ட் அபேட்சகர் நிற்க வேண்டுமானால் கரங்களை உயர்த்துங்கள் என்றார். தந்திக் கம்பமும் மரத்தையும் தவிர மற்ற அனைவரின் கரங்களும் உயர்ந்தன.

★

### மன்னார்குடியில் 10,000 பேர்

மன்னார்குடி வர்த்தகத் தொழிலாளர் சங்க சார்பில் தோழர் ஆர். கோவிந்தராஜுலு தலைமையில் 8-11-45-ல் பொதுக்கூட்டம். ஜில்லாவின் பல பாகங்களிலிருந்தும் விவசாயிகள் வந்துகொண்டேயிருந்தார்கள். மழை மிரட்டியது. எனினும் 2,000 முஸ்லிம் மக்கள் உட்பட 10 ஆயிரம் பேர் கூடினர். 3 மணி நேரம் ஜீவா பேசினார்.

★

### குடந்தையில் 1,500 பேர்

மழை தன் சக்தி பூராவையும் காட்டிற்று. 9-11-45 காலையில் கும்பகோணம் அச்சுக்கூடத் தொழிலாளர் சங்க ஆண்டுவிழா வாணி விலாஸ் தியேட்டரில் நடைபெற்றது, தோழர்கள் சாமி சிதம்பரனார் கொடியேற்ற, வீ. பூவராகன் தலைமையில் ஜீவா பேசினார். காலையில் மழை கொட்டினாலும் யானை குதிரைகளின்மீது செங்கொடி தாங்கிய தொண்டர்கள் முன்செல்ல, 500 தொழிலாளர் ஊர்வலமாகப் பின் சென்றார்கள். கூட்டத்தில் 1,000 பேர். பிரஸ், மோட்டார், வெள்ளிப் பாத்திரம், புஷ்பக்கடை ஆகியவற்றில் வேலைசெய்யும் தொழிலாளர்கள் ஜீவாவை வரவேற்றார்கள்.

அன்று மாலையிலும் மழை. அதனால், மைதானத்தில் கூட்டம் போட முடியவில்லை. டவுன் ஹாலில் 1500 பேரடங்கிய கூட்டம். தோழர் B. ஸ்ரீனிவாச ராவ் தலைமையில் நடந்தது. ஜீவாவும், பி. ராமமூர்த்தியும் பேசினார்கள்.

அன்று மாலை 5 மணிக்கு கவர்ன்மெண்டு காலேஜில் வந்து பேசுமாறு திராவிடக் கழக மாணவர்களும், மாணவ சம்மேளனத்தவர்களும் ஜீவாவை அழைத்தார்கள். அங்கு சென்று, "ஹாஸ்டலில் பிராமணர்-பிராமணரல்லாதார் என்று பாகுபாடு காண்பிப்பதை நிறுத்தவேண்டும். இரு சமூக மாணவர்களும் ஒன்றுபட்டு ஆசிரியர்களிடம் சென்று, எங்களிடையே 'வேற்றுமையை' உண்டுபண்ண வேண்டாமென்று கிளர்ச்சி செய்யவேண்டும், ஜாதிக் கொடுமைகள் ஒழிந்த. தமிழ் நாடு மலர்க!" என முழங்கினார்.

மதுரையில் ஒரு தெருக்கோடியில் செங்கொடியை பறக்கவிட்டபோது!

"ஜனசக்தி"

தனிப்பிரதி விலை அணா 0-2-0.

1 வருட சந்தா ரூ. 5-0-0. 6 மாதம் ரூ. 3-0-0. 3 மாதம் ரூ. 1-8-0

தலையங்கம்

# அபேட்சகர்கள்

இந்திய கம்யூனிஸ்டு கட்சியின் மத்ய பார்லிமெண்டரி போர்டு சென்னை சட்டசபைத் தேர்தலுக்கு தமிழ்நாட்டின் சார்பாக கீழ்க்கண்ட அபேக்ஷகர்களின் நியமனங்களை அங்கீகரித்திருக்கிறது :—

1. பி. ஜீவானந்தம் (சென்னை பாக்டரி லேபர் தொகுதி)
2. பி. ராமமூர்த்தி (கோவை-மலபார் டெக்ஸ்டைல் லேபர் தொகுதி)
3. கே. அனந்த நம்பியார் (ரெயில்வே தொழிற்சங்க தொகுதி)
4. எம். கல்யாணசுந்தரம் (திருச்சி ஸ்ரீரங்கம் நகர தொகுதி)
5. ஆர். கே. சாந்துலால் (மதுரை நகர தொகுதி)
6. மணலி ஸி. கந்தசாமி (மன்னார்குடி கிராம பொது தொகுதி)
7. குப்புசாமி (மன்னார்குடி கிராம ஷெட்யூல் வகுப்பு தொகுதி)
8. டாக்டர் என். அண்ணாஜி (கிருஷ்ணகிரி-ஹோசூர் கிராம தொகுதி)

இன்றுதான் முதன் முதலாக சட்டசபை தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி தனது அபேக்ஷகர்களை நிறுத்தியிருக்கிறது. நிறுத்த வேண்டி ஏற்பட்ட காரணங்களையும், கக்ஷியின் தேர்தல் திட்டங்களையும், விரிவாக விளக்கி கக்ஷியின் தலைவர் பி. ஸி. ஜோஷியின் அறிக்கைகள் ஏற்கனவே வெளிவந்துள்ளன. இந்த 'ஜனசக்தி' இதழிலும் தேர்தல் திட்டத்தின் சில பகுதிகளை வேறொரு புறத்தில் காணலாம்.

வயதுவந்த மக்கள் (சமஸ்தான பிரஜைகள் உள்பட) அனைவருக்கும் ஓட்டுரிமை வழங்கவேண்டும்; நாட்டிலுள்ள பல்வேறு தேசிய இனங்களுக்கும் சுயநிர்ணய உரிமையை அங்கீகரிக்க வேண்டும்; இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு தேசிய இனங்கள் பூர்ண சுதந்திர அந்தஸ்துபெற்ற அரசியல் நிர்ணயசபைகளை தனித்தனியே தேர்ந்தெடுத்து, மக்களின் ஜனநாயக விருப்பப்படி மக்களின் அரசியல் அமைப்பை வகுக்க வேண்டும். அதன் மூலம்தான் எல்லோருக்கும் சுதந்திரம்! கட்சியின் அரசியல் திட்டம் இது! எல்லோருக்கும் வேலை தரப்படவேண்டும் என்று மக்களின் நன்மைக்கான தொழில் வளர்ச்சி திட்டம் இரண்டாவது. எல்லோருக்கும் உணவு கிடைக்க வேண்டும் என்று விவசாய அபிவிருத்தி திட்டம் மூன்றாவது. இத்திட்டத்தின் அடிப்படையில், பொதுமக்களின் ஸ்தாபனமான காங்கிரசும், முஸ்லீம் மக்களின் சிறப்பான ஸ்தாபனமாகிய முஸ்லிம் லீகும், விவசாயி—தொழிலாளிகளை அணைந்த பாட்டாளி வர்க்கத்தின் ஸ்தாபனமான கம்யூனிஸ்ட் கட்சியும் ஒன்றாய் நின்று மக்களின் பூர்ண சுதந்திரத்துக்கும், சுபிக்ஷத்திற்கும் பாடுபடவேண்டும் என்பதே கக்ஷியின் பிரதான அரசியல் கோஷம்!

ஆகையினால்தான், கட்சி போட்டியிடாத பொதுத் தொகுதிகளில் காங்கிரஸையும், முஸ்லிம் தொகுதிகளில் லீகையும், தனது திட்டத்தை அங்கீகரிக்கும் வகையில் பிரசாரம் செய்து, பூர்ண ஆதரவு அளிக்கும் கம்யூனிஸ்டு அபேக்ஷகர்களையும், காங்கிரஸ் லீக் அபேக்ஷகர்களையும் தமிழ் மக்கள் தேர்ந்தெடுக்க முடிவு செய்யும் நாளே காங்கிரஸ்-லீக்-கம்யூனிஸ்ட் ஒற்றுமைக்கு நாடு முழுவதும் அடிகோலும் புனித நாளாகும் என கட்சி ஆவலுடன் எதிர்பார்க்கிறது.

கக்ஷியின் எட்டு அபேட்சகர்களையும், அவர்களின் சிறப்பான கொள்கை பக்தி, சேவா உணர்ச்சி, காரியத்திறன் இவைகளின் மூலம் தமிழ்நாட்டு பாட்டாளி மக்களும், பொதுமக்களும் நன்கு அறிவார்கள். தோழர்கள் ஜீவானந்தமும், ராமமூர்த்தியும் தமிழ்நாட்டில் தொழிலாளிவர்க்க சேவையில் பழுத்த தலைவர்கள். அ. இ. கா. க. அங்கத்தினர்களாய் இருந்தவர்கள் தோழர் ஜீவா 1939-ல் தமிழ் மாகாண காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினராயுமிருந்துள்ளார். தோழர் எம். கல்யாணசுந்தரம் ரயில்வே தொழிலாளர் சேவையில் மட்டுமல்ல, காங்கிரஸ் தொண்டில் மட்டுமல்ல, எல்லா மக்களுக்கும் சேவை செய்வதில் முனைந்த தலைவர் என திருச்சி ஜில்லா தேசபக்தர்கள் அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டவர். தோழர் அனந்த நம்பியார் தென் இந்திய ரயில்வே தொழிலாளிகளுக்கு மட்டுமன்றி, இந்திய ரயில்வே தொழிலாளி இயக்கத்துக்கே தனது மனோவாக்கு காயத்தை அர்ப்பணித்திருக்கும் தியாகி. மதுரை தோழர் சாந்துலால் 1930-லிருந்து தேச சேவையிலீடுபட்டிருப்பவர்; மதுரை மக்களும், மாகாணமெங்குமுள்ள கைத்தறி நெசவாளர்களும் அவரது சிறப்பான சேவையை போற்றுகின்றனர். தோழர் மணலி கந்தசாமி தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் உபகாரியதரிசியாயிருந்தவர். தஞ்சை ஜில்லாவிலும், மாகாணத்திலும் விவசாய இயக்கத்தை வேரூன்றச் செய்தவர். சர்க்காரால் சொந்த ஜில்லாவிலிருந்து கடத்தப்பட்டிருப்பவர். தோழர் குப்புசாமி "தாழ்த்தப்பட்ட" ஜாதிக்காரர். தஞ்சையில் நசுக்கப்பட்டுக்கிடக்கும் ஆயிரக்கணக்கான விவசாயி மக்களின் உரிமைப் போராட்டத்திலே உதித்து, வீரப்பணி செய்து வருபவர். தோழர் அண்ணாஜியை கிருஷ்ணகிரி தாலுக்கா வாசிகளும், விவசாயிகளும் நேசிப்பதற்கு எல்லையில்லை எனலாம். கிருஷ்ணகிரி தாலூகாவிலேயே தலைசிறந்த தேசபக்தர் என்று கருதப்படுபவர். ஜனங்கள் உள்ளும் புறமும் அறிந்த தோழர்கள். இவர்களின் அன்றாடச் சேவையை மக்கள் ஏற்றுக்கொண்டிருப்பதால், மக்களின் சார்பிலே சட்டசபையிலே பேச உரிமை படைத்தவர்கள் என கக்ஷி நம்புகிறது.

கம்யூனிஸ்டுகள் துரோகிகளா, தேசபக்தர்களா? அவர்களின் அரசியல் நாட்டுக்கு ஏற்றதா, தீங்கிழைப்பதா? கக்ஷிப் பெண்கள் தேச சேவிகைகளா, வீதி சுற்றும் பெண்களா? கட்சிக்கு பணம் தருவது மக்களா, அல்லது சர்க்காரா? நமது அரசியல் தடிகொண்டு தாக்கும் 'ரௌடி அரசியலா', அல்லது பொறுப்பான தேசபக்தி அரசியலா? காங்கிரஸ்-லீக்-கம்யூனிஸ்டுகளிடையே பூசல்கள் வளருவது யாருக்கு நன்மை? வெள்ளைக்காரன் நாட்டிலிருந்து வெளியேறுவானா? சுதந்திரம் கிடைக்குமா? சுபீட்சம் உண்டா?

இந்தக் கேள்விகளுக்கு தேர்தலில் ஜனங்களின் தீர்ப்பைக் கேட்கிறது நமது கட்சி. வங்கப் பஞ்சத்தைக் கண்டு கதறிய விவசாயிகளே, தீர்ப்பளியுங்கள்! வேலையில்லா திண்டாட்டம் என்ற நரக அக்னியில் விழவிருக்கும் தொழிலாளிகளே. தீர்ப்பளியுங்கள்! துணியில்லை, நல்ல உணவில்லை, வாழ விடில்லை என்று மனங்கலங்கும் பொதுமக்களே, தீர்ப்பளியுங்கள்!

பாரத நாட்டிலிருந்து மட்டுமல்ல, அகண்ட ஆசியா கண்டத்திலிருந்து மட்டுமல்ல, இவ்வுலகிலிருந்தே ஏகாதிபத்தியத்தை ஒழித்திட துடிக்கும் தேசபக்தர்களே, துல்லியமான தேசபக்தி பரம்பரை செழித்து ஓங்க நீங்கள் தீர்ப்பளியுங்கள்! "ஒன்றுபட்டாலுண்டு வாழ்வே" என்ற பாரதி வாக்கு எட்டுத் திக்கும் ஒலிக்க, எல்லோரும் தீர்ப்பளியுங்கள்!

# ★ தேசபக்தன் டயரி ★

(தோழன்)

தேன் மலர்களை வண்டுகள் நாடுவது இயற்கைதானே! பித்தாபுரம் மகாராஜாவின் சஷ்டியப்தபூர்த்திக்கு (60வது வருட பிறந்த தினக் கொண்டாட்டம்) அடியார்களும், பக்தர்களும், 'தலைவர்களும்' கூடினார்கள். காங்கிரஸ் காரியக்கமிட்டி அங்கத்தினர் டாக்டர் பட்டாபி சீதாராமய்யாவும் விஜயம் செய்திருந்தார். காட்சியைக் காண கோடிக் கண்கள் வேண்டுமாம்!

* * *

### 'பகைவனுக்கு அருள்வாய்'

"மௌனம் கலந்த நட்பே என்னை இங்கு கொண்டு வந்தது. பகைவர்களுடன் பகிரங்கமாக நேச உறவு ஸ்தாபிப்பது ஸத்தியாக்கிரஹியின் தர்மம். பொதுஜன நலனுக்காக மகாராஜா ஆற்றிய பெருந்தொண்டின் புகழைப்பற்றிப் பலர் பேசிவிட்டார்கள். மகாராஜா செய்ய வேண்டியது ஒன்றுதான் பாக்கி. யுவராஜா காட்டிய வழியைப் பின்பற்றவேண்டும். இன்று பிள்ளை காங்கிரஸில் சேர்ந்தால், நாளைக்குத் தந்தையும் சேர்வாரென்று நாம் ஏன் எதிர்பார்க்கக்கூடாது" என்று கேட்டார் டாக்டர் பட்டாபி.

"தேசபக்தர், ரக்ஷகர், ஹரிஜன மித்திரன்" பித்தாபுரம் ராஜகுல திலகன் காங்கிரஸ் ஆலயத்தில் எழுந்தருளவேண்டாமா?

அவர் நீண்டநாள் காங்கிரஸ் விரோதியாயிருந்தாலென்ன? 1937ம் வருட தேர்தல்களில் காங்கிரஸை எதிர்த்து பீப்பிள்ஸ் பார்ட்டி அமைத்துப் போரிட்டார். அதனாலென்ன? பகைவனுக் கருள்வது தான் பட்டாபியின் ஸத்தியாக்கிரக தர்மம்!

* * *

### நீண்டநாள் மோஹம்

ஜமீன்தார்களிடமும், மகாராஜாக்களிடமும் பட்டாபிக்கு ஏற்பட்டிருக்கும் மோஹம் புதிதல்ல, நீண்டநாள் வாஞ்சை.

1938-ல், காளிப்பட்டணம், முனகாலா ஜமீன்தார்களை எதிர்த்து, விவசாயிகள் கம்யூனிஸ்டு தலைமையில் போராடியபோது, டாக்டர் ஜமீன்தார்களை பகிரங்கமாக ஆதரித்தார். ஜமீன்தார்கள் நிலபுலங்களையே கம்யூனிஸ்டுகள் பிடுங்கப் பார்க்கிறார்களென்று காந்திஜிக்கு கூட ரிப்போர்ட் அனுப்பினார்! முனகாலா ராஜா பட்டாபியின் பரம நண்பன்!

* * *

### தோல்வி

1940-ல் கிருஷ்ணா ஜில்லா போர்டு தேர்தல் நடந்தது. விவசாயிகளை ஒன்று திரட்டி, காங்கிரஸுடன் இணைத்து, ஜில்லா காங்கிரஸ் கமிட்டிகளிலே கம்யூனிஸ்டுகள் செல்வாக்கு பெற்றிருந்தனர். இதன் 'ஆபத்தை' உணர்ந்தார் டாக்டர்! விவசாயிகளின் தலைவர்களான கம்யூனிஸ்டுகள் ஜெயித்துவிட்டால், என்னாவது? அதனால், ஜஸ்டிஸ் கட்சியின் தூணாக விளங்கிய, சல்லபள்ளி மகாராஜாவுடன் ஒரு ஒப்பந்தத்துக்கு வர பேச்சு வார்த்தை நடத்தினார்! 52 ஸ்தானங்களில் 24 ஸ்தானங்கள் அவருக்கும் அவர் ஆட்களுக்கும் தருவதாக வாக்களித்தார்.

ஆனால் "பாழாய்ப் போன கம்யூனிஸ்டுகள்" இதெல்லாம் அம்பலப்படுத்தி விட்டார்கள். கிழக்கு கிருஷ்ணா ஜில்லா காங்கிரஸ் கமிட்டியும், மேற்கு கிருஷ்ணா ஜில்லா காங்கிரஸ் கமிட்டியும் அவரைக் கண்டித்தன. என்ன செய்வார், பாவம்? தேர்தலில், சல்லபள்ளி ராஜாவின் கோட்டையாக இருந்த ஜில்லா போர்டில் காங்கிரஸ் கொடியை ஏற்றிவிட்டார்கள் கம்யூனிஸ்டுகள்! 52 ஸ்தானங்களில், காங்கிரஸ் 36 ஸ்தானத்தைக் கைப்பற்றியது!

* * *

1939-ல் ஆந்திர கம்யூனிஸ்டு தலைவர் சுந்தரய்யா காங்கிரஸ் கமிட்டி தேர்தல்களில் கலந்துகொள்வதையே தடுக்கப் பார்த்தார் பட்டாபி. அவர் "பலாத்காரவாதி, காங்கிரசில் தேரத் தகுதியற்றவர்" என்று தீர்ப்புக் கூறினார்.

ஆனால் இந்தத் தடவை காங்கிரஸ் காரியக் கமிட்டி அவருக்கு குறுக்கே வந்தது. அவர் தீர்ப்பை நிராகரித்தது. போதும் போதாதற்கு, ஆந்திர காங்கிரஸ்வாதிகள் சுந்தரய்யாவை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கே தேர்ந்தெடுத்தனர். ஆந்திர காங்கிரஸ்வாதிகள் தலைவரிடம் விசுவாசமில்லாமல் நடந்த அக்கிரமத்தைப் பாருங்கள்!

* * *

### பாரத தர்மம்

"நல்ல வேளையாக," கம்யூனிஸ்டு எதிர்ப்பு 'காங்கிரஸின் அதிகார பூர்வமான கொள்கையாகி விட்டது. ஆந்திர கம்யூனிஸ்டுகளையும் விவசாயிகள் இயக்கத்தையும் விரட்டிவிட்டு, காங்கிரஸை ஜமீன்தார் ஸ்தாபனமாக்குவதில் ஈடுபட்டிருக்கிறார். அதனால்தான், பித்தாபுரம் மகாராஜாவை வருந்தி அழைக்கிறார்! கம்யூனிஸ்டு எதிர்ப்பின் மகத்துவமே மகத்துவம்!

பிரபஞ்சத்துக்கு புது ஆதர்சம் அளிக்க பகவான் 'பாரத தேசத்தை படைத்திருக்கானென்பதில் பட்டாபிக்கு பூர்ண நம்பிக்கை உண்டு.

பிரதிபலன் எதிர்பாராமல், பக்தி விசுவாசத்தோடு, வியர்வையையும் கண்ணீரையும் முதலாளிக்கும் ஜமீன்தாருக்கும் காணிக்கை சமர்ப்பிப்பதுதான் 'பாரத தர்மம்' பகவானை துதிக்கும்போது பிரதிபலனை எதிர்பார்க்கிறோமா? குழந்தையை வளர்க்கும் 'தாய் பிரதிபிரயோஜனத்தை எதிர்பார்க்கிறாளா? இதைத்தானே 'நிஷ்காம தர்மம்' என்று கீதாசிரியன் கண்ணன் கூறினான்! இதைத்தான் டாக்டரும் கூறுகிறார்! முதலாளிகளும் ஜமீன்தார்களும் 'டிரஸ்டிகள் தர்மகர்த்தாக்கள்' அதற்காகத்தான், ஜமீன்தார்களையும், மகாராஜாக்களையும் காங்கிரஸுக்கு வருமாறு அறைகூவி அழைக்கிறார்!

* * *

### விவசாயிகளின் பதில்

ஆனால் ஆந்திர விவசாயிகள் அவர் சொல்லுவதைக் கேட்டால் தானே? வர்க்கப் போராட்டம் என்ற 'விதேச தத்துவத்தின்' வலையில் விழுந்து, கம்யூனிஸ்டுகளின் தலைமையில் கிஸான் சபை ஸ்தாபித்து, ஜமீன்தாரி முறையையே எதிர்க்கிறார்கள். காங்கிரஸ் மகாராஜாக்களுடனும், ஜமீன்தார்களுடனும் சேரக்கூடாது, கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து நின்று, ஜமீன்தாரி முறையையும், அதன் எஜமானனான பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தையும் எதிர்க்கவேண்டுமென்று கூறுகிறார்கள்.

கிருஷ்ணா ஜில்லா டாக்டரின் சொந்த ஜில்லா. அதன் கிராமத் தொகுதியில், கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் சுந்தரையா நிற்கிறார். காங்கிரஸ் தன் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு, லீக் எதிர்ப்புக் கொள்கையை விட்டுவிட்டு, சுதந்திர இந்தியாவை ஸ்தாபிக்க காங்கிரஸ்-லீக்-கம்யூனிஸ்ட் ஒற்றுமை வேண்டுமென்று அறைகூவுகிறார். அவரை எதிர்த்து நின்று பொதுஜன நீதிமன்றத்தின் தீர்ப்புக்கு உட்படுமாறு டாக்டர் பட்டாபிக்கு சவால் விடுகிறார். டாக்டர் என்ன செய்வார்? கம்யூனிஸ்டு எதிர்ப்பு அவருடைய 'வாழ்க்கைப் பணி!' விவசாயிகளின் வயிற்றிலடிக்கும் மகாராஜாக்களும், ஜமீன்தார்களும் அவருக்கு உற்ற துணைவர்கள்! "காங்கிரஸ்—லீக்—கம்யூனிஸ்டு ஒற்றுமை", ஜமீன்தாரி முறை ஒழிக!" என்று கோஷிக்கும் கிருஷ்ணா விவசாயிகள் முன் எப்படி நிற்பார்?

## பக்ரீத் பெருநாளில்

### ரயில்வே தொழிலாளர் வேலை நிறுத்தம்

முஸ்லிம் விசேஷ நாட்களுக்கு ரயில்வே நிர்வாகம் லீவ் விடுவதில்லை. முஸ்லிம்களுக்குக் கண்டிப்பாக லீவ் கொடுக்க வேண்டுமென்று ரயில்வே தொழிற்சங்கம் நீண்ட நாட்களாகக் கிளர்ச்சி செய்து வருகிறது. கடந்த 9-வது மகாநாட்டிலும் மற்ற எல்லா தொழிலாளர்களுடைய ஆதரவுடன் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பக்ரீத் பெருநாளுக்கு எல்லா தொழிலாளருக்கும் லீவ் விட்டுவிட வேண்டுமென்றும், அந்த வேலை தினத்தை ஈடுசெய்ய வருகிற சனிக்கிழமைகளில் எல்லா தொழிலாளரும் வேலை செய்வதாகவும் ரயில்வே நிர்வாகத்தை சங்கப் பொதுக் காரியதரிசி அனந்த நம்பியார் கேட்டுக் கொண்டார். இதை நிர்வாகம் மறுத்துவிட்டது.

இதை எதிர்த்து பொன்மலை ஒர்க் ஷாப்பில் வேலை செய்யும் 600 முஸ்லிம்களும் அன்று ஒர்க் ஷாப்புக்குள்ளேயே வேலை நிறுத்தம் செய்தனர். அவர்களுக்கு ஆதரவாக மற்ற 5500 தொழிலாளரும்-ஹிந்துக்கள், கிருஸ்தவர்கள், ஆகிய எல்லோரும்-வேலை நிறுத்தம் செய்தனர்.

ஒர்க்ஷாப் மூலையொன்றுக்குச் சென்று, முஸ்லிம் தொழிலாளர்கள் அவ்வளவு பேரும் தொழுதார்கள். மற்றத் தொழிலாளர்கள் அவ்வளவு பேரும், தொழுகை முடியும் வரை இரண்டு புறங்களிலும் நிசப்தத்துடன் நின்று கொண்டிருந்தனர். எல்லா மெஷின்களும் நிறுத்தப்பட்டன. சிறு ஓசையும் கேட்கவில்லை. 'குத்பா' முடிந்த பிறகு திரும்பவும் வேலை தொடங்கப்பட்டது.

# ஜீவசக்திபெற்ற விவசாய மக்கள்

(8-ம் பக்க தொடர்ச்சி)

மிராசுதார்கள் நிலம் கொடுக்க மறுத்தும், சிறை தண்டனை பெற்றும், அவர் உறுதி தளரவில்லை. ஒரு கையை இழந்த வீராசாமி கிஸான் சபையின் தலைவர். சேரியிலே பிறந்து, சேரியின் துர்நாற்றத்திலே, வளர்ந்த ஹரிஜன் தோழர் குப்புஸாமி மன்னார்குடி—திருத்துரைப்பூண்டி தீண்டத்தகாதவர்களின் திலகமாக திகழ்கிறார்.

விவசாயிகளின்விமோசனத்துக்கு சிறந்த முறையில் தொண்டாற்ற இவர்கள் கம்யூனிஸ்டு கட்சியில் சேர்ந்து உழைக்கிறார்கள்.

### கட்சி திட்டம்

இந்த மூன்று வருடகால இயக்கத்தின் தொடர்ச்சியாக கம்யூனிஸ்டு கட்சியின் சார்பில் தோழர்கள் மணலி கந்தசாமியும் (பொதுத் தொகுதி) குப்புஸ்வாமியும் (ஹரிஜன் தொகுதி) திருத்துரைப்பூண்டி—மன்னார்குடி தொகுதிக்கு அபேட்சகர்களாக நிற்கிறார்கள். நெருக்கடி மிகுந்த மூன்று வருஷ காலத்தில் விவசாயிகளின் சுகதுக்கங்களைப் பகிர்ந்துகொண்டு, அவர்கள் இயக்கத்தைக் கட்டிய தீரர்கள் இவர்கள்.

இவர்களை அபரிமிதமான மெஜாரிட்டியுடன் தேர்ந்தெடுக்குமாறு இந்திய கம்யூனிஸ்டு கட்சியின் தமிழ்நாட்டு கமிட்டி மன்னார்குடி—திருத்துரைப்பூண்டி வாக்காளர்களை கேட்டுக்கொள்கிறது:- மூன்று வருஷகாலமாக நிலச்சுவான்தாரித்துவத்தையும் ஏகாதிபத்தியத்தையும் எதிர்த்து நீங்கள் நடத்திய போராட்டத்தில் தலைமைதாங்கியவர்கள் இவர்கள். அவர்களை தேர்ந்தெடுப்பது உங்கள் கடமை,

சுயநலப்பேய் பிடித்தாடும் கள்ள சேமிப்பாளர்களும் நிலச்சுவான்தாரி முறையில் ரத்தத்தை உறிஞ்சும் அட்டைகளும் நிறைந்த கிராம அமைப்புக்கு சாவுமணியடித்து, உழவர்கள் தலைமைதாங்கும் புதிய கிராமத்தை அமைக்க கம்யூனிஸ்டு கட்சி பாடுபடுகிறது.

தேர்தல்கள் முடிந்தவுடன், சட்டசபைகள் செய்யவேண்டிய இடைக்கால வேலைகளையும் கட்சி திட்டமிட்டிருக்கிறது. (5ம் பக்கம்) இவைகளை நிறைவேற்ற மணலியும் குப்புஸாமியும் சட்டசபையில் போராடுவார்கள்; வெளியிலும் கட்சி பொதுஜன பலத்தை திரட்டும்.

### ஜீவசக்தியை நிரூபியுங்கள்

கிஸான் இயக்கத்தின் ஜீவசக்தியை நிரூபியுங்கள்! "கிசான் இயக்கம் கிளர்ச்சிக்காரர் சூழ்ச்சி" என்று இறுமாப்புடன் அவதூறு பொழிந்த அதிகாரவர்க்கத்துக்கு ஆணித்தரமான பதிலளியுங்கள்! ரௌடித்தனத்தால் கிஸான்களை அடக்கி விடலாமென்று நினைத்து, குண்டர்களை ஏவிவிட்ட நிலச்சுவான்தார்கள் வயிற்றைக் கலக்க வேண்டும் தேர்தல் முடிவு! அதுவே நமது வெற்றி நாள்!

கம்யூனிஸ்டு எதிர்ப்பில் கண்ணிழந்த சில காங்கிரஸ் தலைவர்கள் பலர் உங்கள் அரசியல் ஆர்வத்தை, வர்க்க உணர்ச்சியை துச்சமாக மதிக்கின்றனர். கிஸான் சபையின் சேவையை, தேசபக்தியை இழிவுபடுத்துகின்றனர். தேர்தல்களின் முடிவுகள் நேர்மையான காங்கிரஸ்வாதிகளின் கண்களைத் திறக்கச் செய்ய வேண்டும்.

கிஸான் இயக்கத்தைக் கட்டியதற்காக அதிகாரவர்க்கம் மணலி கந்தஸாமியை ஜில்லாவிலிருந்து வெளியேற்றியது. மணலி கந்தஸாமியை மிகப் பெரும்பான்மையான வோட்டுகள்மூலம் தேர்ந்தெடுத்து அதிகார வர்க்கத்தின் சவாலுக்கு—ஏகாதிபத்தியத்தின் சவாலுக்கு—பதிலளியுங்கள்!

# விவசாயிகளே! நீண்ட நாள் காத்திருந்து சாகமுடியாது!

# உடனே புதுவாழ்விற்கு அடிகோலுவோம்

## நம் தோழர்களை அனுப்புவோம்!

*இழந்த ஐரோப்பா! நிலப் பிரபுத்துவத்தின் கோட்டை! எஸ்டேட் எதேச்சாதிகாரத்தின் ஏகாந்த வாசஸ்தலம்! பிற்போக்குப் பிண்டங்களின் உறைவிடம்! இன்று அழிந்தது!*

*போலந்திலே, ஹங்கேரியிலே, ருமேனியாவிலே நிலச் சீர்திருத்தம்! எஸ்டேட்டுகள் உடைக்கப்பட்டன! ஏழை விவசாயிகளுக்குப் பங்கிடப்பட்டன! பேயாட்சி மடிந்தது! புதிய ஜன நாயகம் பிறந்தது! அவதியுறுகிறோம் நாம்; அதைப் பார்க்க ஆனந்தம் பொங்குகிறது! அவர்களால் முடிந்தது; நம்மாலும் முடியும்; நம்பிக்கை பிறக்கிறது!*

போலந்திலே நூறு பேருக்கு நிலமிருந்தால் 34 பேருக்கு 5 ஏக்கருக்குமேல் இருந்ததில்லை! மொத்தம் நிலப்பரப்பில் 65 பேருக்கு 15 சத விகிதத்திற்கு மேலில்லை. ஆனால் ஒருவனிடம்மட்டும் 125 ஏக்கருக்கு மேலிருந்தது: மொத்த நிலப்பரப்பில் 52 சத விகிதத்திற்கு மேல் அவனிடம் இருந்தது. இப்பொழுது அவன் தொலைந்தான்! புதிய சர்க்கார் பொதுஜன சர்க்கார்! அவன் நிலத்தை மற்றவருக்குக் கொடுத்து விட்டது!

40 லக்ஷம் ஏக்கர் நிலத்தை 8 ஆயிரத்து 832 பேர் வைத்திருந்தனர். ஒவ்வொருவருக்கும் ஒரு எஸ்டேட்டு. இன்று அவை பிளக்கப்பட்டு விட்டன! 3 லக்ஷத்து 2 ஆயிரத்து 893 குடும்பங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன! ஒரு எஸ்டேட்டை உடைத்தபோது 40 ஏழை விவசாயிகளுக்கு நிலம் கிடைத்தது!

ஹங்கேரியிலே நூறு பேருக்கு நிலமிருந்தால் 85 பேருக்குமேல் 12½ ஏக்கருக்கும் குறைவாகவே நிலமிருந்தது! ½ பேர்வழியிடம் 290 ஏக்கருக்கு அதிகமாக இருந்தது! மொத்த ஜனத்தொகை 87 லக்ஷம்; இதில் 6,200 பேரிடம் ஆளுக்கு 290 ஏக்கருக்குமேலிருந்தது; இவர்கள்தான் இந்த ½ பேர்வழி!

ஆனால் இன்று அந்த அரைப் பேர்வழி தொலைந்துவிட்டான்! 5 லக்ஷத்து 80 ஆயிரம் ஏக்கர் நிலம்—எஸ்டேட்டுகள்—உடைக்கப்பட்டன. 35 லக்ஷம் பேர்களுக்குப் பங்கிடப்பட்டு விட்டன!

உழைப்பவனுக்கே நிலம் என்பது உறுதியாச்சு!

தஞ்சாவூர் ஜில்லாவில் நூறு பேருக்கு நிலமிருந்தால் 3 பேரே 100 ரூபாய்க்கு அதிகமாக நிலவரி கொடுக்கிறார்கள். 3½ பேர் 50 ரூபாயிலிருந்து 100 வரை செலுத்துகின்றனர். 4½ பேர் 30 ரூபாயிலிருந்து 50 ரூபாய் வரை கொடுக்கிறார்கள். 17 பேர் 10 ரூபாயிலிருந்து 30 ரூபாய் வரை கொடுக்கிறார்கள். ஆனால் 10ரூபாய்க்குக் குறைவாகக் கொடுப்பவர்களோ 72 பேர்! 72 பேருக்கு வயிற்றுக்கே போதாத வருமானத்தைக் கொடுக்கிற நிலம்!

உழுவதற்கு மாடுகள் வாங்க வேண்டும்; விதை வேண்டும்; மண்வெட்டி, ஏர்கலப்பை, உரம் முதலியவை வேண்டும். அதாவது, பணம் வேண்டும்! எங்கே போவான் ஏழை விவசாயி? வருகிற வருமானம்தான் வயிற்றுக்கே போதவில்லையே! வட்டிக் கடைக்காரனிடம் ஓடுவான்; பெரிய மிராசுதாரிடம் போவான். பணம்வாங்கி வருவான். வட்டி குட்டிப் போடும். இரண்டொரு வருடங்களில் நிலமே பறிபோய்விடும்!

10 ரூபாய்க்குக் குறைவாக வரி கொடுப்பவர்கள் 72 பேர்தான். ஆனால் வரியே கொடுக்காத, நிலமே இல்லாத ஏழை விவசாயிகளோ ஆயிரக் கணக்கில் இருக்கிறார்கள். பண்ணையாட்களாகவும், கூலியாட்களாகவும் உழைத்து அறுத்து யாருக்கோ கொட்டுகிறார்கள்.

இவர்களில் பலருக்கு முன்பு நிலமிருந்தது. பொழுது விடிவதற்கு முன்பே புன்சிரிப்புடன் எழுந்து, தெம்மாங்குப் பாடிக்கொண்டு வயல்களுக்குச் சென்றனர். தங்கள் சொந்த வயலிலே உழும்போது, 'குஷி'யாகப் பாடி ஆடினர். ஆனால் வாங்கியக் கடனைத் திருப்பிக்கொடுக்க முடியாமல் அந்நிலத்தை இழந்தனர். புன்சிரிப்பையும் இழந்தனர்; குஷியான பாட்டையும் மறந்தனர்.

வங்காளத்திலே இருக்கிறது நவகாளி ஜில்லா. நூறு விவசாயிகளில் 36 பேருக்கே முன்பு நிலமில்லாமல் இருந்தது. பஞ்சம் வந்ததும் 36 பேர் 60 பேராக அதிகரித்து விட்டனர். அதே சமயத்தில் அந்த ஜில்லாவிலேயே மூன்று குடும்பத்தினருக்கு நிலம் பெருகிற்று! 1000 ஏக்கருக்கு சொந்தக்காரர்களாக இருந்தவர்கள் 3000 ஏக்கர் சொந்தக்காரர்களானார்கள்!

* * *

### நிலத்தின் சக்தி குறைகிறது

தஞ்சாவூர் ஜில்லாவில் நெல் விளைகிறது. அதற்கு உரமாக நைட்ரஜனும் (Nitregon) பாஸ்பாரிக் ஆஸிடும் (Phosphoric acid) நிலத்துக்கு வேண்டும். சாதாரணமாக ·06 % நைட்ரஜனும், ·01 % பாஸ்பாரிக் ஆஸிடும் தேவை. ஆனால் 1937-38ல் நிலப் பரிசோதனை செய்யப்பட்டபோது, டெல்டா பிரதேசத்தில் பாதி நிலங்களில் ·04 % நைட்ரஜன்தான் இருப்பதாகத் தெரிந்தது. அநேகமாக டெல்டா மண் முழுவதிலும் ·06 %க்குக் குறைவாகவே நைட்ரஜன் இருக்கிறது. இதைப் போலவே பாஸ்பாரிக் ஆஸிடும் காணப்பட்டது. பணமுள்ள மிராசுதார்கள் நிறைய எரு வாங்கலாம். இந்தக் குறைவைப் பூர்த்தி செய்யலாம். ஆனால் 10 ரூபாய்க்குக் குறைவாக வரி கொடுப்பவர்களோ, திண்டாட வேண்டியதுதான். விளைச்சல் குறைவதில் ஆச்சரியமில்லை!

இதோடு, யுத்த காலத்தில் இவ்வேழை விவசாயிகள் சொல்லொணா துன்பத்தை அனுபவித்திருக்கின்றனர். தேவைப் பண்டங்கள் யானை விலை குதிரை விலைக்கு விற்றிருக்கிறது. உழவு மாடுகள் கிடைக்காமல் திண்டாடினர். ஒன்றுக்குப் பத்தாகக் காசுகொடுத்து எல்லாவற்றையும் வாங்கினர். கடன்பட்டிருக்கின்றனர் பலர். ஏற்கனவேயேயுள்ள கடன்பளு வேறு கழுத்தை அழுத்திக்கொண்டிருக்கிறது.

இந்த நிலைமையில் இதையெல்லாம் எப்படி சமாளிப்பார்கள்? நவகாளி ஜில்லா விவசாயிகள் சென்ற வழியில் செல்வார்களா? ஏற்கனவே கூலியாட்களாகச் சென்று, வழிகாட்டியிருக்கும் சகோதரர்களைப் பின்பற்றுவார்களா? அல்லது போலந்து தேசத்து சகோதரர்கள் காட்டியிருக்கும் வழியைப் பின்பற்றுவார்களா?

புதிய போலந்திலே வட்டிக்கடைகாரனிடம், பெரிய மிராசுதார்களிடம் ஓடவேண்டிய அவசியமில்லை. ஏழாயிரம் கூட்டுறவுசாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. 20 லட்சம் விவசாயிகள் அவற்றில் அங்கத்தினர்கள். அவற்றிடமிருந்து பணம் வாங்கலாம்; உரம் வாங்கலாம்; ஏர் கலப்பைகள் வாங்கலாம். வட்டித் தொந்தரவின்றி சாவதானமாகக் கடனடைக்கலாம்! நிலம் பறிபோய் விடாது!

* * *

### உடனடியாகச் செய்யவேண்டும்!

நம் நாடு விவசாயிகள் நாடு. விவசாயிகள் செல்வம் நாட்டின் செல்வம். விவசாயிகள் மகிழ்ச்சி நாட்டின் மகிழ்ச்சி. அவர்களுடைய பொருளாதாரம் இன்று சீரழிந்து வருகிறது. போதிய விளைச்சலின்றி தவிக்கின்றனர்; நிலத்தை இழக்கின்றனர்; வீதிகளிலே ஓட்டாண்டிகளாக திரிகின்றனர்.

இதைத் தடுப்பது தேசபக்தி. அவர்களுக்கு நிலமளித்து நிலைக்க வைப்பது தேசத்தொண்டு. அதற்காகத் திட்டமிட்டு பாடுபடுவது தேசபக்தன் கடமை.

இதற்கு ஒரேவழி பொருளாதாரத்தைப் புதிய அஸ்திவாரத்தில் கட்டவேண்டும். நிலத்தைப் பறிக்கும் நீசக் கரங்களை வெட்டி சாய்க்க வேண்டும்!

அரசியல் நிர்ணய சபை கூடி சுதந்திர இந்தியாவின் சட்ட திட்டங்கள் வகுக்கப்படும்வரை காத்திருக்க முடியாது. உடனடியாக இப்போதே காரியத்தைச் செய்யாவிட்டால் விவசாயிகள் குட்டிச்சுவராகிவிடுவார்கள். மலைபோல் பெருகும் துன்பத்தை ஜனங்களால் தாங்க முடியாது.

தேர்தல் வருகிறது. இது முடிந்தவுடன் மந்திரி சபைகள் தோன்றும். இந்த மந்திரி சபைகளே உடனடியாக இந்த வேலையை மேற்கொள்ள வேண்டும். இதற்கான திட்டத்தை இப்போதே தயாரிக்கவேண்டும்.

காங்கிரஸ் தேர்தல் பிரகடனத்தில் இதைப்பற்றி எந்தவிதமான திட்டமும் இல்லை. இதைப்பற்றி லீக் வாயைத்திறக்கவேயில்லை! 'ஒருநாடு' என்கிறது ஒரு திட்டம்! 'இரண்டு

**"உழவர் ஊழியன்"**

நாடு!' என்கிறது மற்றொன்று. இவர்கள் தேர்தலில் ஜெயித்தவுடன் என்ன செய்வார்கள்? இதே சண்டையை சட்டசபைகளிலும் போட்டுக்கொள்வார்கள். மிராசுதார்களுக்குக் கவலை இல்லை. எத்தனை வருடங்களுக்கு வேண்டுமானாலும் இந்தச் சண்டையைப் பார்த்துக்கொண்டிருக்கலாம். ஆனால் நமக்கோ? விவசாயிகளுக்கோ? அதோ! அழிகிறது நம் குடும்பம்; பெண்டு பிள்ளைகள் சந்தியிலே நிற்கிறார்கள்! "ஐயோ! அப்பா!!" என்று வேதனையால் அலறுகிறார்கள்.

அவர்கள் சண்டையை நிறுத்தி நம் துன்பத்தைக் காண அவர்கள் கவனத்தை இழுக்கவேண்டும். அதற்கு நம் தோழர்களை அங்கே—சட்டசபைகளுக்கு—அனுப்பவேண்டும்.

* * *

### திட்டம் தயாரித்துவிட்டது!

பொதுஜன மந்திரி சபைகள் என்ன செய்யவேண்டும் என்பதற்கு இப்போதே திட்டம் தயாரித்துவிட்டது நம் தோழர்களின் கட்சி—நம்முடைய கட்சி—கம்யூனிஸ்டுக் கட்சி. நிலத்தைச் சீர்திருத்தம் செய்யவேண்டும். வருஷத்திற்கு ஒரு விவசாயிக்கு எவ்வளவு வருமானம் தேவைப்படுகிறதோ, அந்த வருமானத்தைப் பெறுவதற்கு எவ்வளவு நிலத்தில் பயிர் பண்ண வேண்டுமோ, அவ்வளவு நிலம் ஒவ்வொரு விவசாயிக்கும் கொடுக்கப்படவேண்டும் என்று கூறுகிறது. வட்டி வாங்கப்படுவதை ஒழிக்க வேண்டுமென்கிறது. உணவுப் பண்டங்களைத் தங்களிஷ்டப்படி வியாபாரம் செய்வதற்கு அனுமதித்ததால் அல்லவா, வியாபாரிகளால் அவற்றைப் பதுக்க முடிந்தது? கொள்ளை லாபம் கேட்க முடிந்தது? 35 லட்சம் மக்களை வங்காளத்தில் கொல்ல முடிந்தது? இனி இந்த ஜீவாதாரமான பொருள்களில் வியாபாரம் செய்ய அவர்களை விடக்கூடாது. சர்க்காரே நேரடியாக கொள்முதல் செய்து விற்பனை செய்ய வழிகாண வேண்டுமென்கிறது கம்யூனிஸ்டுக் கட்சி. அதேபோல் கூட்டுறவுச் சாலைகளை அமைக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்கிறது. தரிசு நிலங்களையெல்லாம் பங்கிட்டுக் கொடுக்கவேண்டுமென்கிறது.

இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டால், போலந்து தேச விவசாய சகோதரனைப் பின்பற்றினவர்களாவோம். நிறைவேற்றப்படாவிட்டால் நவகாளி ஜில்லா விவசாயிகளைப் பின்பற்றினவர்களாவோம்.

போலந்து தேசத்திலாகட்டும், யூகோஸ்லேவியாவிலாகட்டும், ஹங்கேரியிலாகட்டும், இன்று விவசாயிகள் 'குஷி'யாக சிட்டியடித்துக் கொண்டு யந்திர ஏரை ஓட்டுகின்றனர் என்றால், அதற்குக் காரணம் இந்தத் திட்டத்தை தயாரித்தவர்களை அவர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுத்தனர். சட்ட சபைகளுக்கு அனுப்பினர். அதே கம்யூனிஸ்டு கட்சியினர்தான் இங்கு இப்பொழுது உங்களுக்கு உழைக்கின்றனர். இத்திட்டத்தை சமர்ப்பித்திருக்கின்றனர். உங்கள் தீர்ப்பைக் கோரி நிற்கின்றனர்.

கம்யூனிஸ்டுக்கு போடும் ஓட்டு விவசாயம் சீரழியாமல் தடுப்பதற்கு போடும் ஓட்டு! புதிய அஸ்திவாரத்தில் அதை நிர்மாணிக்கப் போடும் ஓட்டு! விவசாய சகோதரர்களே! போலந்தை, ஹங்கேரியை, ருமேனியாவைப் பார்த்துப் பொறாமைப் படுவதோடு நிற்கவேண்டாம்! இதோ! இங்கே நீங்களே அதை அடையலாம்! உங்கள் ஓட்டு—என்னுடைய ஓட்டு—நம்முடைய ஓட்டு—எல்லோருடைய ஓட்டும் கம்யூனிஸ்டு கட்சிக்கே!

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

### அடக்குவதில் கவலை!

ஐயா,

நான் வேலை செய்யும் பின்னி பிச் என்ஜினீரிங் ஒர்க்ஷாப் ஒரு வெள்ளைக்காரன் கம்பெனியே. அதன் நிர்வாகமே ஒரு விசித்திரம்! பிட்டிங் ஷாப்பில் ஒரு மேஸ்திரி இருக்கிறார். அவருக்கு வேலைகளில் அனுபவமே கிடையாது. ஆடுமாடுபோல் தொழிலாளரை அதட்டி மேய்ப்பதே தன் வேலை என்று நினைக்கிறார். அன்றாடம் தொழிலாளருக்கு வேலைத் திட்டமிட்டுக் கொடுக்க இவருக்கு யோக்யதையே இல்லை.

பி. அண் ஸி. மில்லுக்கான பல பாகங்கள் இங்கு செய்யப்படுகின்றன. பாலு என்பவர் பிட்டிங் ஷாப்பில் அந்த வேலைகளுக்குப் பொறுப்பு. மேஸ்திரியிடம் போனால் தொழிலாளருக்கு ஒரு வேலையும் கொடுக்க மாட்டார். பாலுவிடம் போனால், அவர் உடனே மில் ஜாப்களை தருவார்.

தாங்களாக மில் ஜாப்களை வாங்கி தொழிலாளர் வேலை செய்துகொண்டிருக்கும்போது மேஸ்திரி திடீரென்று ஓடி வருவார் "இந்த வேலையை அப்படியே போட்டுவிட்டு கப்பலுக்கு ஓடவேண்டும்" என்று கட்டளை இடுவார். போகாவிட்டால் "தாம் தூம்" தான்!

மில் ஜாப்களுக்குக் கணக்கு ஒப்படைக்காமல் ஓடுகிறீர்களே என்று பாலு சத்தமிடுவார். ஆக மொத்தத்தில் தொழிலாளர் பாடு திண்டாட்டம்தான்!

வேலைக் கொடுக்கத் திறமையற்ற மேஸ்திரியைப்பற்றி டைரக்டருக்கு சங்கக் காரியதரிசி எழுதினார். "அது என் நிர்வாகம்; உங்கள் ஆலோசனை வேண்டியதில்லை" என்று பதில் வந்தது!

டைரக்டருக்கு வேலையைப்பற்றி கவலையில்லை; தொழிலாளர் எப்படியாவது மிரட்டி அடக்கப்படுகிறார்களா என்பதே கவலை!

பிட்டிங் ஷாப் தொழிலாளி,
சென்னை.

★

### நூல் நெருக்கடியா?

தோழரே,

சேலம் ஜவஹர் மில் தொழிலாளி நான். நூல் பஞ்சம் என்று கேட்கும்போதெல்லாம் எனக்கு சிரிப்புதான் வருகிறது.

எங்கள் மில்லில் இப்பொழுது மிஷின் ரொம்ப 'லத்தாடா'கிறது. அதைக் கிளீன் செய்து எண்ணெய் போடும் பழக்கம் நின்றுவிட்டது. கொஞ்ச நாட்களுக்குமுன்பு அதிக 'ஹீட்' ஆகி நெருப்புப் பிடித்துக் கொண்டது. அதை அடக்க சாமான்கள் இல்லை. பகலில் 10 முதல் 15 மிஷின்களும், இரவில் 20 முதல் 25 மிஷின்களும் ஓடாமல் சும்மா நிற்கின்றன. "மில்லா அது? சே! நரகமல்லவா?" என்கிறார்கள் தொழிலாளர்கள். லத்தாடுக்கு பயந்து லீவ் எடுக்க எத்தனிக்கிறார்கள். இதோடு பெரும்பாலானவர்கள் வெளியூர் தொழிலாளர்கள்; கிராமாந்திரத்திலிருந்து வருபவர்களும் உண்டு. வந்தென்ன செய்வது? நகரத்தில் ஒண்டுவதற்கு வீடில்லை! மில் ஓட்டத்திலே ஒரு 'குஷி'யைக் காணும் தொழிலாளி, அதை விட்டு ஓடுவதற்கு என்ன வழி என்று நினைக்கிறான்!

இந்த மில் நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தாமல், "நூல் பஞ்சம்" என்றால் சிரிப்புதானே வரும் தோழரே?

ஜவஹர் மில் தொழிலாளி,
சேலம்.

★

### நிறுத்துங்கள் இக்கொடுமையை!

ஐயா,

திண்டுக்கல் தாலூகாவைச் சேர்ந்த ஒட்டநாகம்பட்டியில் கொஞ்சநாட்களுக்கு முன்பு "தாழ்த்தப்பட்டோர் சங்கம்" ஒன்றை ஏற்படுத்தினோம். மற்ற ஜாதி ஹிந்துக்களுக்கு தெரிந்தும் தெரியாமலும் நடத்தி வந்தோம். எங்கள் குழந்தைகள் படிப்பதற்காக இரவில் பாடம் கற்றுக்கொடுத்து வந்தோம்.

3-11-45-ல் சேரி நடுவில் ஒரு கூட்டம் போட்டோம். உபயன் என்பவர் பேசினார். அப்போது அங்கு கூலியாள் கூப்பிட வந்த ஒரு விவசாய முதலாளிக்குக் கோபம் வந்துவிட்டது. "என்னடா! சங்கம்; எல்லாவற்றையும் தவிடு பொடியாக்கிவிடுகிறேன்!" என்று மிரட்டிச் சென்றார்.

ஊரிலுள்ள தன் இனத்தாரிடம் போய் சொன்னார்: "பறப்பயல்களெல்லாம் படித்துவிட்டு அட்டகாசம் செய்கிறார்கள்" என்று. மறுநாள் அவ்வினமே எங்களைத் திட்டி பயமுறுத்த ஆரம்பித்துவிட்டது. அப்போதுதான் மதுரையில் கூடிய காங்கிரஸ் மகாநாட்டிற்குச் சென்று திரும்பிவந்த ஆர். ரெங்கசாமி, ரெட்டி என்னைக் கூப்பிட்டு மிரட்டினார். "தாழ்த்தப்பட்டோர் சங்கமாடா? கவிழ்த்தப்பட்டோர் சங்கமாக்கிவிடுவோம்!" என்று அதட்டினார்.

நாங்கள் ஏதாவது எதிர்த்துப் பேசினால் அடியும் உதையும்தான் கிடைக்கும். அடங்கிக்கொண்டோம். அவர்களெல்லோரும் காங்கிரஸ்காரர்கள். அவர்களில் ஒருவர் காங்கிரஸ் அபேட்சகராகத் தேர்தலில் நிற்கப்போகிறார். அவர் மீது எப்படி எங்களுக்கு நம்பிக்கை ஏற்படும்? சங்கம் சேரும் உரிமை இல்லையா எங்களுக்கு? படித்தால் 'அட்டகாசம் செய்கிறதாக'வா அர்த்தம்? சகிக்க முடியாது இனி இந்தக் கொடுமையை! உடனே நிறுத்துங்கள்!

கே. வி. சென்னிமலை,
ஒட்டநாகம்பட்டி.

★

### ஆசிரியர்களே! இது அழகா?

ஐயா,

எங்களூர் நேட்டிவ் ஹைஸ்கூல் ரொம்ப பழமையானது. இன்று நாட்டிலே பேரும் புகழும் சம்பாதித்துத் திகழும் அறிவாளிகளிலே பலர் இங்கே படித்தவர்கள். அவர்களுடைய பெயர்களைக் கேட்கும்போதெல்லாம் எங்களுக்கு ரொம்ப பெருமையாக இருக்கும். "அவர்கள் படித்தப் பள்ளிக்கூடத்தில் நாமும் படிக்கிறோமே!" என்று சந்தோஷப்படுவோம்.

ஆனால் இன்று இதன் நிலைமை எங்கள் மனதை வாட்டுகிறது. லிட்ரரி சொஸைட்டி ஒன்று இருக்கிறது. லைப்ரரியும் இருக்கிறது. இவற்றிற்கு அங்கத்தினர் தொகையாக சுமார் 120 ரூபாய்க்குமேல் மாணவர்களிடமிருந்து வசூலிக்கப்படுகிறது. இதை நிர்வகிப்பதில் ஜனநாயகமே கிடையாது. மாணவர்களுக்கு எந்தவிதமான பங்கும் இல்லை. காரியதரிசி உபாத்தியாயரே!

பத்திரிகைகள் வருகின்றன ஆனால் மாணவர்களுக்குக் கிடைப்பதில்லை. ரீடிங்ரூம் மாணவர்கள் உபயோகத்திற்கு இல்லை. லைப்ரரி புத்தகங்கள் சரியாகக் கிடைப்பதில்லை.

ஸ்போர்ட்ஸ் பீஸ் வாங்கிக் கொள்கிறார்கள். அபூர்வமான விளையாட்டு மைதானம் இருக்கிறது. முன்பெல்லாம் ரொம்ப ஜோராக ஸ்போர்ட்ஸ் நடந்துவந்தது; ஆனால் இப்போது மூன்று வருடங்களாகின்றன வருடாந்திர ஸ்போர்ட்ஸ் நடந்து! தினசரி விளையாட ஒழுங்காக பந்து முதலியவை மாணவர்களுக்குக் கிடைப்பதில்லை!

இதையெல்லாம் நிர்வகிக்கும் உபாத்தியாயர் ஒருவர் இருக்கிறார். அவருடைய தடபுடல்களை பார்ப்பதற்கு ஜோரான 'ஸ்போட்ஸா'க இருக்கிறது!

தைரியமாக நிமிர்ந்து கௌரவத்துடன் நடக்க இங்கு எதிர்கால சந்ததிகள் பழக்கப் படுவதில்லை; பயந்து நடுங்கி தலைகுனிந்து நடக்கும்படி பழக்கப்படுகிறார்கள்!

ஒரு மாணவன்,
கும்பகோணம்.

# ஹிந்துமகா சபையுடன் கூட்டுறவு

## பிற்போக்கு பணமுட்டைகள் ஐக்யம்

*"குவிட் இந்தியா (இந்தியாவை விட்டு வெளியேறு) என்பதே வரும் தேர்தல்களில் காங்கிரஸின் போராட்ட கோஷமாயிருக்கும்" என்று தன் பிறந்த தினக்கொண்டாட்ட கூட்டத்தில் ஸர்தார் வல்லபாய் படேல் கோஷித்தார். எல்லா காங்கிரஸ் தலைவர்களின் தேர்தல் பிரசாரத்திலும் இது எதிரொலிக்கிறது.*

S. ராமகிருஷ்ணன்

குவிட் இந்தியா என்பது புத்தம் புதிய கோஷமல்ல. பரிபூர்ண விடுதலையை காங்கிரஸ் மகாசபையின் லட்சியமாக லாகூர் காங்கிரஸ் (1930 ஜனவரி 1) ஏற்றுக்கொண்டதுமுதல், அது காங்கிரஸின் போர்க் கோஷமாயிருந்து வருகிறது. 1920-22ல் சட்டமறுப்பு, கிலாபத் இயக்கங்களில் கலந்து போராடிய சுதந்திர வீரர்களில் சிலர் சேர்ந்து இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை ஸ்தாபித்த காலம்தொட்டு, —பரிபூர்ண சுதந்திரம்—அரசியல், சமூக, பொருளாதார விடுதலை—கம்யூனிஸ்ட் கட்சியின் லட்சியமாக இருந்து வருகிறது. 1924ம் வருஷத்திலேயே, தோழர்கள் டாங்கே, காட்டேமீது "மாட்சிமைதங்கிய மன்னர்பிரானை எதிர்த்துப் போரிட்டதற்காக" பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் கான்பூர் சதி வழக்கை ஜோடித்தது. காங்கிரஸ் பரிபூர்ண விடுதலையை தன் போர்க்கொடியில் பொறிக்க வேண்டுமென்று 1926-30ல் தேசமெங்கும் நடந்த கிளர்ச்சியில் கம்யூனிஸ்ட்கள் முன்னணியில் நின்றனர். 1936ல் முஸ்லிம் லீக் பரிபூர்ண சுதந்திர தீர்மானத்தை நிறைவேற்றியது. 1940ல் பரிபூர்ண சுதந்திர பாக்கிஸ்தான் என்ற கோஷத்தைக் கொடுத்தது.

குவிட் இந்தியா புதிய கோஷமல்ல—காங்கிரஸ் 'மாத்திரம்' கோஷிக்கவில்லை. காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்ட் கட்சி மூன்று ஸ்தாபனங்களுக்கும் பொதுவான கோஷந்தான்.

ஏகாதிபத்திய தளைகளை தகர்த்தெறிந்து, அதன் மரணப் பிடிப்பிலிருந்து விடுபட்டு, புதிய சுதந்திர இந்தியாவை சிருஷ்டிப்பது எப்படி என்பதே இன்றைய பிரச்னை. இந்தியா சுதந்திரமடைய, காங்கிரஸ் வகுத்திருக்கும் வழி என்ன? ஸர்தார் படேலின் பதில் இதுதான்;

"உங்கள் முன்வைக்க, என்னிடம் எந்த விதமான திட்டமுமில்லை, யோசனையுமில்லை. வரப் போகும் தேர்தல்களில் காங்கிரஸுக்கு அபரிமிதமான வெற்றி கிடைக்கச் செய்வது உங்கள் கடமை. அதை நிறைவேற்றும்படிதான் நான் கேட்டுக்கொள்ள முடியும். இதைச் செய்தபிறகு, அடுத்தபடி என்ன செய்ய வேண்டியதென்பதைப் பற்றி ஆரஅமர யோசிக்க, வேண்டிய அவகாசம் இருக்கிறது. தேர்தலுக்கு மாத்திரமல்ல, அடுத்த போராட்டத்துக்கும் தேசம் ஆயத்தமாக வேண்டும்".

என்று அதே கூட்டத்தில் ஸர்தார் விளக்கினார்.

"எங்களை நம்புங்கள். நாங்கள் சுயராஜ்யம் கொண்டுவந்து தருவோம்" என்பதுதான் ஜனங்களுக்கு காங்கிரஸ் தலைமை அளிக்கும் 'திட்டம்'!

இன்னொரு போராட்டத்தைப் பற்றி எச்சரிக்கைகள் கொடுக்கப்படுகின்றன.

"வேவல் சர்க்காரின் அடுத்த நடவடிக்கை என்ன என்பதைப் பொறுத்திருந்து பார்க்கவேண்டும். ஆனால் நாம் எதிர்பார்ப்பதைவிட சீக்கிரமே வந்துவிடக்கூடிய இறுதி போராட்டத்துக்கு மக்களை தயார் செய்யவேண்டும்"

என்று பம்பாய் கூட்டத்தில் பண்டித நேரு கூறினார்.

### எப்படி தயார் செய்வது?

வேவல் சர்க்கார் நியாயம் வழங்காதா? என்று எதிர்பார்த்தல்; வேவல் தவறினால், போராட்டம்! அதற்கு 'மக்களை எப்படி தயார் செய்வது?'

1942 போராட்டத்தில், தொழிலாளி-விவசாயி இயக்கங்களில் செல்வாக்குள்ள கம்யூனிஸ்ட்கள் 'துரோகம்' செய்துவிட்டார்கள்! முஸ்லிம் மக்களிடையே மிகப் பெரிய செல்வாக்கையுடைய முஸ்லிம் லீக் 'ஏகாதிபத்திய ஏஜெண்டாய்' நின்றது! அதனால் முஸ்லிம் லீகையும் கம்யூனிஸ்ட்களையும் ஒழித்துக்கட்டுவதின் மூலமே சுதந்திரப்போராட்டத்திற்கு 'ஜனங்களை தயார் செய்யவேண்டும்.' இதுதான் காங்கிரஸ் தலைமையின் அரசியல்.

காங்கிரஸ் தலைமைக்குப் பின்னால் கோடிக்கணக்கான மக்கள்-சுதந்திர ஆர்வத் துடிப்புடைய மக்கள்-நிற்கின்றனர். ஆனால் அதே சுதந்திர ஆர்வத்தால் உந்தப்பட்டு கோடிக்கணக்கான முஸ்லிம்கள் லீகுக்குப் பின் நிற்பதும், விழிப்படைந்த தொழிலாளி-விவசாயி மக்கள் கொள்கைப் பிடிப்புடன், அதிலிருந்து பிறக்கும் கட்டுப்பாட்டுடனும் கம்யூனிஸ்ட் கட்சி பின்னால் நிற்பதும் காங்கிரஸ் தலைமை கண்ணில் படவில்லை! லீகை ஒழித்துவிட்டு, முஸ்லிம்களை காங்கிரஸ் திரட்டிவிடலாம், கம்யூனிஸ்ட்களை ஒழித்துவிட்டு, கிஸான், தொழிலாளர்களை காங்கிரஸ் வசியப்படுத்திவிடலாம் என்று நினைக்கின்றனர். சங்கத்தை உடைத்துவிட்டு, தொழிலாளர்களை அடங்கி ஒடுங்கியிருக்கும்படி செய்துவிடலாமென்று நினைக்கும் முதலாளி மனோபாவம் இது. முஸ்லிம்களின் பாகிஸ்தான் உணர்வையும், தொழிலாளி விவசாயிகளின் வர்க்க உணர்ச்சியையும், துச்சமாக மதிக்கும் மனப்பான்மை இது.

இதன் விளைவென்ன? லீக் எதிர்ப்பு காங்கிரசை எங்கு கொண்டு போகிறதென்று முதலில் பார்ப்போம்.

காங்கிரஸின் பரம்பரை தேசிய பரம்பரை. ஜாதிமத பேதம் பாராது, சகலரையும் சகோதரர்களாகப் பாவித்து, பொதுவான சுதந்திரப் போராட்டத்திற்கு இந்திய மக்களைத் திரட்டுவது காங்கிரஸின் சரித்திரம், தனிப்பண்பு. ஹிந்து வகுப்புவாதத்துக்குச் சாவுமணியடித்து, ஹிந்துமக்களிடையே சுதந்திரக்கனல் கொளுத்தி, ஏகாதிபத்திய எதிர்ப்பு உணர்ச்சி ஊட்டியது காங்கிரஸ். ஹிந்து வகுப்புவாதத்தை எதிர்த்துப்போரிடுவதன்மூலமே முஸ்லிம்கள் நமது தேசீயத்தின் உண்மையை உணர்வார்களென்று காங்கிரஸ் தலைவர்கள் கூறி வந்திருக்கின்றனர். முஸ்லிம் லீகை சகோதர ஸ்தாபனமாக மதித்து, அத்துடன் பல தடவைகள் பேசியும் ஒப்பந்தத்துக்கு வந்துமிருக்கிறோம். 1916ல் காங்கிரஸ் லீக் ஒப்பந்தத்தை லோகமான்ய பாலகங்காதர திலகர் செய்தார். 1937 தேர்தலில்கூட சென்னை, ஐக்கிய மாகாணம் முதலிய இடங்களில் லீகுடன் ஒரு "சமரஸ ஏற்பாட்டுக்கு" காங்கிரஸ் வந்தது. ஆனால் அதே சமயத்தில் ஹிந்து மகாசபையை சளைக்காமல் எதிர்த்து வந்திருக்கிறது.

இன்று அந்த பரம்பரை காற்றில் பறக்கிறது! லீக் எதிர்ப்பு காங்கிரஸ் பிடரியைப் பிடித்து ஹிந்துமகாசபை மடியில் தள்ளுகிறது!

வங்காளத்தில், சியாம்பிரசாத் முக்கர்ஜி ஹிந்து மகாசபைத் தலைவர். பஞ்சகாலத்தில், முப்பது லட்சம் மக்களை காவு வாங்கிய கள்ள மார்க்கெட் காதகர்களுக்கு ஆதரவாய் நின்ற உத்தமன்! வங்காள காங்கிரசின் தலைவராக விளங்கும் சர்தார் படேலின் 'புதிய நண்பர்' சரத்சந்திர போஸ் சியாம்பிரசாத் முக்கர்ஜியை ஒப்பந்தத்துக்கு வரும்படி அழைக்கிறார்! முக்கர்ஜி-போஸ் சம்பாஷணைகள், கடிதப் போக்குவரத்துகள் நடந்தன. தற்காலிகமாக பேச்சு முறிந்துவிட்டது. அரசியல் கொள்கை வித்தியாசத்தாலல்ல; யார் யாருக்கு எத்தனை ஸீட்டுகள் என்று பங்கு போட்டுக்கொள்வதில் தகராறு. 9-ந்தேதி மாலை தேசபந்து பார்க்கில் நிகழ்ந்த தேர்தல் பொதுக்கூட்டத்தில் சரத் போஸ் இதைப் பகிரங்கப்படுத்தினார்.

"நம்மிருவருக்குள் சண்டை வேண்டாமென்பதற்காக, நான் இரண்டு ஸ்தானங்களை ஹிந்து மகாசபைக்கு அளிப்பதாக டாக்டர் சியாம்பிரசாத் முக்கர்ஜியிடம் கூறினேன். ஆனால் முக்கர்ஜி அதற்கு உடன்படவில்லை" என்று குறிப்பிட்டார். (அமிருதபஜார் பத்திரிகை, 11-11-45.)

மத்திய சட்டசபைக்கு, வங்க மாகாணத்தில் 6 பொதுத் தொகுதிகளில் இரண்டை போஸ் கொடுத்தார். முக்கர்ஜி மூன்று கேட்டாராம்! (சமப்பிரதிநிதித்துவம் கோரினார்!)

### பாஞ்சாலத்தில்

பாஞ்சாலத்திலோ, காங்கிரஸ்-ஹிந்து மகாசபை ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. காங்கிரஸ்வாதி சமன்லாலை எதிர்த்து ஹிந்து மகாசபைவாதி கோகுல்சந்த் நாரங் போட்டியிட்டார். தேர்தலில் காங்கிரஸ் சுலபமாக ஜெயித்திருக்கும். ஆனால் காங்கிரஸ் தலைவர்கள் நாரங்கின் சகாக்களுடன் திரைமறைவில் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். முடிவில் 31-10-45-ல், காங்கிரஸ் தலைவர்கள் நாரங்குக்கு ஒரு வாக்குறுதிக் கடிதம் எழுதிக்கொடுத்தனர். பாக்கிஸ்தானையும், காங்கிரஸ் லீக் (அல்லது ஹிந்து முஸ்லிம்) சமப்பிரதிநிதித்துவத்தையும், சட்டசபையிலும் வெளியிலும் எதிர்த்துப் போரிடுவதாக வாக்களித்தார்கள். (ஹிந்து முஸ்லிம் சமப்பிரதிநிதித்துவத்தை ஸிம்லா மகாநாட்டில் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது. தேசாய்-லியாகத் திட்டத்தின் காங்கிரஸ் லீக் சமப்பிரதிநிதித்துவத்தை காந்திஜி ஏற்றுக்கொண்டிருக்கிறார்.)

அதன்பின் மகாசபைவாதி வாபஸ் வாங்கிக்கொண்டார். "ஹிந்து மகாசபையின் போராட்டத்தை காங்கிரசே நடத்தினால் எங்களுக்கு வேறென்ன வேண்டும்? இப்பொழுது காங்கிரசுக்கும், மகாசபைக்கும் ஒரு அரசியல் வித்தியாசமுமில்லை" என்று வெற்றி வெறியில் பேசுகிறார் பாஞ்சால ஹிந்து கண்காணிப்பு சங்க காரியதரிசி லாலா பிரிஜ்லால்.

"சமன்லால்-நாரங் ஒப்பந்தத்தை ஏன் அகில இந்திய ஒப்பந்தமாகச் செய்யக்கூடாது?" என்று கேட்கிறது காங்கிரசை ஆதரிக்கும் பிரதாப் பத்திரிகை!!

### படேலின் ஆதரவு

காங்கிரஸ்-ஹிந்துமகாசபை ஒப்பந்தத்துக்கு சர்தார் படேலின் பரிபூர்ண ஆதரவுண்டென்பது பகிரங்க ரகசியம். பம்பாயில் தான் பிறந்த தினக் கூட்டத்தில் பேசுகையில்,

"ஹிந்துக்களின் உரிமைகளைக் காப்பாற்ற விரும்பும் ஹிந்து மகாசபை வாதிகள் ஒவ்வொருவரும் காங்கிரசில் சேர்ந்து சேவை செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்"

என்று ஹிந்து மகாசபை வாதிகளுக்கு படேல் வேண்டுகோள் விடுத்தார். முஸ்லிம் காங்கிரஸ் தலைவர் மியான் இப்திகாருதீனை பம்பாய் அ. இ. கா. கூட்டத்தில் விரட்டினார். இப்பொழுது ஹிந்துமகாசபை வாதிகளை வரவேற்கிறார்.

இதன் விளைவென்ன? பாஞ்சால முஸ்லிம் காங்கிரஸ்வாதிகள் மாகாணக் காங்கிரஸ் காரியாலயத்தில் கூடி காங்கிரஸ் - ஹிந்துமகாசபை ஒப்பந்தத்தை கண்டனம் செய்து தீர்மானித்திருக்கின்றனர். "இந்தக் கொள்கை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி கொள்கைக்கும், தேர்தல் பிரகடனத்துக்கும், விரோத

(12-ம் பக்கம் பார்க்க)

# தேர்தல் மஸாலா

கள்ளமார்க்கெட்காரர்களை கழுவிலேற்றவேண்டுமென்ற பண்டித நேருவின் கோஷத்தைக் காங்கிரஸ் காரியக் கமிட்டியிலுள்ள மூற்போக்கான தலைவர்களே மறந்துவிட்டார்கள் போலிருக்கிறது! பண்டித கோவிந்த வல்லப பந்த் கான்பூர் நகருக்கு அக்டோபர் மாதம் 21ம் தேதி விஜயம் செய்தார். நான்கு நாட்கள் தங்கினார். கொள்ளை லாப கள்ளமார்க்கெட்கூட்டத்துடன் உறவாடுவதற்குதான் அவருக்கு நேரம் சரியாயிருந்தது!

* * *

### சிங்கேனியா யார்?

நிலக்கரி கள்ளமார்க்கெட் புகழ் பதம் பாட் சிங்கேனியாவுடன் 21ம் தேதி விருந்துண்டார். பாலியா ஜில்லா மக்களின் வீரதீரத்தைப் போற்றிப் புகழ்கிறார் பண்டித நேரு. அதே பாலியா மக்களை அசுரத்தனமாக அடக்கியவர் ஐ. மா. கவர்னர் ஹாலட். ஏகாதிபத்ய திமிர் தாண்டவத்தின் வடிவமாக விளங்கிய இந்த ஹாலட்டின் ஞாபகத்தை 'கௌரவிக்க', ஹாலட் ஞாபகார்த்த கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது. சிங்கேனியா அதன் தலைவர்.

* * *

### இதர போஷகர்கள்

விருந்துக்கு வேறு யார் வந்திருந்தார்கள். ஹரிசங்கர பாக்லா, ராம்ரதன் குப்தா, ஸர்தார் இந்தர் ஸிங் முதலிய கான்பூர் கொள்ளை லாபக் கூட்டத்தினர்.

யுத்தகாலத்தில், கோடிக்கணக்கில் சம்பாதித்த சாமர்த்தியசாலி ராம்ரதன் குப்தா! லக்ஷ்மிரதன் மில்லின் முதலாளி. அவர் ஆலையில் உற்பத்தியான துணி, மார்க்கெட்டுக்கே வந்ததில்லை யென்று சொல்லப்படுகிறது. கள்ளமார்க்கெட்டில் அவ்வளவு கெட்டிக்காரன். 1938ல் கான்பூர் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தை எதிர்த்து, காங்கிரஸ் கட்டுப்பாட்டை மீறியதற்காக, காங்கிரஸிலிருந்து கல்தா கொடுக்கப்பட்டார்.

பாக்லாவும், லட்சக்கணக்கில் சம்பாதித்தவர் (யுத்தகாலத்தில்) போன வருடம், அவர் குடும்பத்தில் நடந்த கல்யாணத்தில், விஸ்கி, பிராந்தியில் மாத்திரம் ஒரு லட்சம் ரூபாய் செலவழித்தாராம்!

இவர்கள் எல்லோரும் ஹாலட் ஞாபகார்த்த கமிட்டியில் அங்கத்தினர்கள்.

அக்டோபர் 22ம் தேதி பந்த் ஸர்தார் இந்தர் சிங்குடன் விருந்துண்டார்; மறுநாள் ராம்ரதன் குப்தாவின் உபசாரம்! ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அதே கூட்டம்தான்! இந்த நான்கு போஷகர்களும்!

* * *

### தேர்தல் நிதி

காங்கிரஸ் தேர்தல் நிதிக்கு கான்பூரின் கோட்டா ஐந்து லக்ஷம் ரூபாய். பதம்பாட் சிங்கேனியாவிடமிருந்து பந்த் ஒரு லக்ஷம் வாங்கினாராம்; ராம்ரதன் குப்தாமூலம் 57 ஆயிரம் ரூபாய்! பாக்லா சகோதரர்களிடமிருந்து 51 ஆயிரம் ரூபாய்! கள்ளமார்க்கெட் வியாபாரிகள் பலரடங்கிய கான்பூர் கப்டா கமிட்டியிடமிருந்து 35 ஆயிரம் ரூபாய்! ஸர் ஹரிகோவிந்த் மிச்ராவிடமிருந்து 5 ஆயிரம் ரூபாய்.

ஐக்கிய மாகாணத்தில் தேசியப் போர்முனையின் பத்திரிகையை ஸ்தாபித்து, அதன் ஆசிரியராக விளங்கியவர் மிஸ்ரா. சமீபகாலத்தில், காங்கிரஸ் எதிர்ப்புப் பிரசாரம் செய்ய இந்திய சர்க்காரால் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டவர். ஹாலட் ஞாபகார்த்த கமிட்டியின் அங்கத்தினர்.

* * *

### பந்த் உறுதிமொழி!

விருந்துக் கூட்டத்தில் பேசுகையில் "குவிட் இந்தியா தீர்மானத்தை நிறைவேற்றுவதன்மூலம் உங்கள் பாதையை நாங்கள் செப்பனிடுகிறோம். பண்டித பாலகிருஷ்ண சர்மா உங்களுடைய ஆள். உங்கள் நலன்களை கண்காணிப்பார்" என்று கூறினாராம் பந்த். பண்டித பாலகிருஷ்ண சர்மா கான்பூர் தொகுதியின் காங்கிரஸ் அபேட்சகர். காங்கிரசின் தொழிலாளர் 'எக்ஸ்பர்ட்.'

சர்மாஜி, கான்பூர் கள்ளமார்க்கெட் காதகர்களின் கையாளென்கிறார் பந்த். குவிட் இந்தியா நிறைவேறினால், மக்களை வாட்டி வதைத்த கூட்டத்தின் பாதை சுலபமாகுமாம்! இதுதான் நேருவின் கோஷத்தை நிறைவேற்றும் பாதையா?

கவர்னர் ஹாலட்டின் தாஸர்கள், கொள்ளை லாபமடித்த நீசர்கள், சிங்கேனியா கூட்டத்துடன் கூடிக்குலாவி, அவர்கள் கொள்ளைப் பணத்திலிருந்து காங்கிரஸ் தேர்தல் நிதிக்கு வசூலித்துவிட்டு, அவர்களின் கயவத் தொழிலுக்கு ஆசி கூறிவிட்டு, பொதுக்கூட்டத்தில் போய் பந்த் என்ன பேசினார் தெரியுமா? கள்ள மார்க்கெட் சண்டாளர்களைப்பற்றி ஒரு வார்த்தையில்லை! "கம்யூனிஸ்டுகள் ஆகஸ்டு புரட்சிக்கு துரோகம் செய்தார்கள்," "அவர்கள் தேசிய விரோதிகள்" என்றெல்லாம் அளந்து கொட்டினார்! காங்கிரஸை நேசிக்கும் பதினாயிரக்கணக்கான கான்பூர் மக்கள் இதைப்பற்றிஎன்னநினைப்பார்கள்.

* * *

### இன்னொரு விசேஷம்

இதில் இன்னொரு விசேஷம். பண்டித பந்தின் பிரசங்கத்தை லால் இம்லி மில் மானேஜ்மெண்ட் ஆலை முழுவதும் ஒலி பரப்பியது!

லால் இம்லி மில்லின் முதலாளிகள் ஐரோப்பியர்கள்! 1938-ல் கான்பூர் முதலாளிகள் சங்கத்தின் மூலம், கோவிந்த வல்லப பந்தை பிரதம மந்திரியாகக் கொண்ட காங்கிரஸ் மந்திரி சபையை எதிர்த்துப் போராடியவர்கள். கம்யூனிஸ்ட் எதிர்ப்பு ஐரோப்பிய முதலாளிகளையும் காங்கிரஸ் தலைமையுடன் இணைக்கிறது!

* * *

### காரணம் என்ன?

கம்யூனிஸ்ட் தலைமையிலுள்ள தொழிற்சங்கம் முதலாளிகளுக்கெல்லாம் பெரிய தலைவலியாயிருக்கிறது

கள்ளமார்க்கெட்காரர்களை பகிரங்கமாக விசாரணை செய்து, அவர்கள் கொள்ளையடித்த சொத்துக்களை பறிமுதல் செய்யவேண்டுமென்று வற்புறுத்தும் கம்யூனிஸ்ட் தேர்தல் திட்டம் கொள்ளை லாபக் கயவர்களின் வயிற்றைக் கலக்குகிறது.

பிரிட்டன் நமக்கு கொடுக்கவேண்டிய ஸ்டர்லிங் நிதியின் ஒரு பகுதியாக, ஐரோப்பியர்கள் கையிலுள்ள ஆலைகள், தேயிலைத் தோட்டங்கள், காப்பித் தோட்டங்கள் முதலியவற்றை அரசாங்கம் ஸ்வீகரிக்க வேண்டுமென்று கம்யூனிஸ்டு தேர்தல் திட்டம் வற்புறுத்துகிறது. எடுத்த காரியத்தை நிறைவேற்றும் கர்மவீரர்கள் கம்யூனிஸ்டுகளென்பது ஐரோப்பியர்களுக்குத் தெரியும்.

அதனால் இந்த சுரண்டும் கூட்டம் முழுவதும் பந்தின் கொடி பின்னால் திரண்டு நிற்கிறது.

* * *

### பயமுறுத்தலா?

கம்யூனிஸ்ட்களை தேர்தல்களில் தோற்கடிக்க வேண்டுமென்ற பொதுவான பிணை கொள்ளை லாபக் கூட்டத்தையும், காங்கிரஸ் தலைமையையும் ஐக்கியப்படுத்துகிறது! "தேர்தலுக்குப் பின் காங்கிரஸ் பதவிக்கு வரப்போகிறது. உங்கள் கோரிக்கைகளுக்கு காங்கிரஸ் மந்திரி சபையின் அனுதாபம் வேண்டுமென்றால், காங்கிரசுக்கு வோட்டு போடுங்கள்! கம்யூனிஸ்ட்களுக்கு வோட் போட்டால், காங்கிரஸ் அனுதாபத்தை இழப்பீர்கள்" என்று காங்கிரஸ் தலைவர்கள் பிரசாரம் செய்கிறார்கள்.

பயமுறுத்தி வோட் வாங்குவது காங்கிரஸ் சரித்திரத்திலே ஒரு புதுமை!

ஆனால், அரசியல் விவேகமுள்ளவர்கள் பயமுறுத்தலுக்குப் பணிய மாட்டார்கள்.

### திருத்தம்

14-11-45 தேதியிட்ட 'ஜனசக்தி' இதழ் 6-வது பக்கம் 2-வது பத்தியில் "(கோவை) பாப்பநாயக்கன்பாளையம்" என்ற தலைப்பின் கீழ், லட்சுமி மில் முதலாளியைப்பற்றி அதிலிருக்கிறவாறு எழுதியிருப்பது ஆதாரமற்றது என நமது நிருபர் அறிவித்துள்ளார். தவறு ஏற்பட்டதற்கு வருந்துகிறோம்.

# தோழர்களே! நண்பர்களே!

# காலதாமதம் செய்வதற்கில்லை;

## உடனடியாக வேண்டும்!

தோழர்களே, வாசகர்களே!

தோழர் பி. ஸி. ஜோஷி விடுத்திருந்த வேண்டுகோளைப் படித்திருப்பீர்கள் என்று நம்புகிறோம். மார்ச்சு மாதத்திற்குள் 5 லட்ச ரூபாய் கட்சி நிதி திரட்டவேண்டும். இதில் தமிழ்நாட்டின் பங்கு ஒரு லட்ச ரூபாய்.

இன்றைக்கு தேசம் எந்த நிலைமையிலிருக்கிறது என்று உங்களுக்குத் தெரியும். நம் தேசத்தின் ...கள் மூன்று ஸ்தாபனங்களில் பிரிந்து நிற்கின்றனர். இரண்டு ஸ்தாபனங்கள் ஒன்றை ...று எதிர்த்துத் தாக்கிக்கொள்கின்றன. இதனால், ஏகாதிபத்தியத்தை விரட்ட முடியாமல் ...தோடு நம் தேசத்தின் பொருளாதாரமே சீரழிந்து வருகிறது.

...வர்க்கத்தினரிடையே ...குகிறவர்களுக்கு இதன் ...என்ன என்று சுலபத்தில் ...இருக்கலாம். ஆனால் சமு... அடிதளத்திலிருக்கும் ...ய பழகும் நாங்கள் ...ழிவின் கோர சொரு... ஒவ்வொரு நாளும் ...பார்த்துக்கொண்டிருக்கி... ...தொழிற்சாலைகளில் நெருக்... ...வசாயத்தில் நெருக்கடி! ...ப்படியாவது சமாளித்து ...—தேசத்தைப்—பாது...டும் என்ற எண்ணமே ...முதலில் தோன்றுகிறது. ...அரசியல் கட்சிகளும்,— ...—ஒன்றுபட்டாலன்றி ...னியாக நின்று யாராலும் ...க முடியாது என்பது எங்க... ...தீர்க்கமான முடிவு; அனு...தில் ஏற்பட்ட தீர்மானம்.

...ண்ட ஹிந்துஸ்தானா, பாக்...ா என்ற விவாதத்தைத் ...நடத்தித் திட்டிக்கொள்வ... ...அரசியல் தலைவர்கள் ஈடு...க்கின்றனர். இதனால் ஏகாதி...த்தியத்தை விரட்டக்கூடிய சக்... ...ைய துஷ்பிரயோகம் செய்கிறார் ... பொருளாதாரச் சீரழிவைத் ...க என்ன செய்வது என்று ...ம் கவலைப்படுவதாகத் தெரிய...லை; திட்டம் போட்டிருப்பதாகத் ...யவில்லை.

...தச் சண்டையை நிறுத்த வேண்டும். தேசத்தைப் பேராபத்திலிருந்தும் மீட்கும் பணியில் அவர்கள் கவனத்தை இழுக்கவேண்டும். அதற்கு ஒரேவழி ஒரு பொதுவான திட்டத்தின் அடிப்படையில் அவர்களை ஒன்றுபடுத்தவேண்டும்.

அந்தப் பொதுவான விஷயங்கள் என்ன?

- சர்வஜன ஓட்டுரிமையின் அடிப்படையில் ஒவ்வொரு தேசிய இனத்திற்கும் அரசியல் நிர்ணய சபை.
- இயந்திரத் தொழில் விஸ்தரிப்பினால் எல்லோருக்கும் வேலை!
- நிலச் சீர்திருத்தத்தினால் விவசாயிகளுக்கு நிலம் கொடுத்து எல்லோருக்கும் உணவு!

இதை எப்படி நிறைவேற்றுவது? இதற்கான திட்டத்தை 7ம் பக்கத்திலும் 5ம் பக்கத்திலும் பார்க்கவும்.

நம் எல்லோருக்கும் பொதுவானது அடிமைத்தனம். மேற்கண்டவற்றை நிறைவேற்ற முடியாமல் குறுக்கே இதுவே நிற்கிறது. இதை எப்படி அகற்றுவது? எல்லா ஜனங்களும் ஒன்றுபடவேண்டும்! இந்த அடிமைத்தனம் நீங்கினால் வேறொரு அடிமைத்தனம் தங்கள் மீது விழாது என்று எல்லா ஜனங்களும் உணரவேண்டும்.

ஆகவே, எல்லோருக்கும் சுதந்திரம் என்ற எண்ணத்தில் ஒன்றுபட வேண்டும். இதற்காக எல்லாத் தேசிய இனங்களுக்கும் தனித்தனி அரசியல் நிர்ணய சபை! ஒவ்வொருவரும் யாருடைய நிர்ப்பந்தமுமின்றி தங்கள் சுதந்திரத்தைத் தாங்களே நிர்ணயித்துக்கொள்ளட்டும்!

இன்றைக்குள்ள பேராபத்தைத் தடுக்க இதைத் தவிர வேறு வழியில்லை ஆனால் காங்கிரஸ் தலைவர்களும், லீக் தலைவர்களும் இதை ஏற்றுக்கொள்ள மாட்டேனென்கிறார்கள். தங்களுடைய சண்டைப் போட்டுக்கொள்ளும் திட்டத்தையே ஜனங்கள் ஆதரிக்கிறார்கள் என்று நினைக்கிறார்கள்.

இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு தேசத்தைப் பாதுகாத்து அடிமைத்தனத்திலிருந்து மீளும்படி அவர்களுக்குப் பொதுஜனங்கள் சொல்லவேண்டும். ஜனங்கள் இத்திட்டத்தை ஆதரிக்கிறார்கள் என்று நிரூபிக்க வேண்டும். இதற்காகவே தமிழ்நாட்டில் எட்டுத் தொகுதிகளில் இந்தத் திட்டத்தின் அடிப்படையில் நாங்கள் தேர்தலில் நிற்கிறோம்.

எல்லோருக்கும் இதை எடுத்துச் சொல்லவேண்டும்; விளக்கிக் கூற வேண்டும். இரண்டு ஸ்தாபனமும் ஒன்றுபட்டு தேசத்தைக் காக்க எப்படி பொதுவான அம்சங்களெல்லாம் இத்திட்டத்தில் அடங்கியிருக்கின்றன என்று எடுத்துக் காட்ட வேண்டும்.

அதற்கு இன்றுவரும் 'ஜனசக்தி' இரண்டு பங்கு பக்கங்களுடன் வெளி வரவேண்டும். எழுப்பப்படும் சந்தேகங்கள் ஒவ்வொன்றையும் தெளிவுபடுத்தி சிறு பிரசுரங்களை வெளியிட வேண்டும். பெரும்பாலான மக்களுக்குக் கிடைக்கக் கூடிய அளவில் அச்சிடவேண்டும். அதாவது, இன்றைய ஜனசக்தி ஆபீஸும், அச்சுக்கூடமும் விஸ்தரிக்கப்பட வேண்டும்.

அதோடு, ஊர்ஊராய் சுற்றுவதற்கும், ஒலி பெருக்கிகளுக்கு ஏற்பாடு செய்யவும், ஊழியர்களுக்கு உணவளிக்கவும், அபேட்சகர்களுக்கு டிபாசிட் கட்டவும் செலவழிக்க வேண்டும்.

தமிழ்நாட்டிற்கு மட்டும் ஒரு லக்ஷ ரூபாய் தேவை என்று மதிப்பிடுகிறோம்.

இந்தத் தொகையை யார் கொடுப்பது? இந்தக் கொள்கைதான் சரி என்று நம்பும் கட்சி அங்கத்தினர்களும், தொழிலாளர்களும், விவசாயிகளும், படிப்பாளிகளும்தான் கொடுக்க வேண்டும். இதில் அவர்களுடைய சுயநலம் மட்டுமல்ல; தேசத்தின் பரந்த பொதுநலன் இணைந்து பிணைந்திருக்கிறது!

ஆகவே, எல்லோரையும் கேட்கிறோம். பணம் கொடுங்கள். எவ்வளவு முடியுமோ அவ்வளவையும் கொடுங்கள். உங்கள் வேலைக்கு, உணவிற்கு, சுதந்திரத்திற்கு உத்திரவாத மளிக்கும் திட்டத்தை சகல ஜனங்களும் ஏற்றுக்கொண்டு, நடைமுறையில் நிறைவேற்றப்படுவதற்காக, நீங்கள் கொடுக்கும் ஒவ்வொரு அணாவும் செலவு செய்யப்படும்.

மார்ச்சு மாதத்திற்குள் இந்த ஒரு லக்ஷத்தை சேர்த்துத் தாருங்கள்.

செங்கொடியின்கீழ் நின்று மகத்தான போராட்டங்களை நடத்தி வந்திருக்கும் தொழிலாளர்களை விசேஷமாகக் கேட்டுக்கொள்கிறோம். தோழர்களே! உங்கள் கொடியைப் பாதுகாத்து நில்லுங்கள்! காலதாமதம் செய்வதற்கில்லை; உடனடியாக உங்கள் காணிக்கையைச் செங்கொடிக்கு செலுத்துங்கள்!

எம். ஆர். வெங்கட்ராமன்,
காரியதரிசி,
தமிழ் நாடு கமிட்டி,

# "முடிந்தவரையில் உங்களுக்கே தருவோம்"

"இதர கட்சிகளின் அரசியல் திட்டங்களையும், தேர்தல் திட்டங்களையும் நான் ஆராய்ந்து பார்த்தேன். மக்களுக்கு சுதந்திரம் என அவை கோஷித்தாலும், கம்யூனிஸ்ட் கட்சி யொன்றுதான் திட்டத்திலும், சேவையிலும் முரணற்று இருப்பதை கண்டேன். தெளிவான நடைமுறைக்கு ஏற்ற ஒரு அரசியல், பொருளாதார திட்டத்தை மக்களிடம் சமர்ப்பித்து எல்லோருக்கும் சுதந்திரம், சுபிட்சம் வேண்டும் என்கிறது. விசேஷமென்னவென்றால், ஒவ்வொரு நாளும் கிசான் சபை மூலமும், தொழிற்சங்கத்தின் மூலமும் ஜனங்களின் கஷ்டநிவர்த்திக்காக வேலை செய்வதும் அதுவே; அந்த தினசரி பாட்டாளி சேவைக்கு ஒத்தமாதிரியாயும், அதிலிருந்து பிறந்ததாயும் இருக்கிறது கக்ஷியின் திட்டம்.

நான் ஒரு சோல்ஜர். சொந்த ஊருக்குத் திரும்பிப்போய், மக்களுடன் ஒன்றாய்க் கலக்கும் காலம் எனக்கு சமீபிக்கிறது. அந்த மக்களின் நிகழ்கால நலன்களுக்கு மட்டுமின்றி, எதிர்கால சுபிட்சத்திற்கும் பாடுபடும் கம்யூனிஸ்டுக் கக்ஷிக்கு என்னாலான உதவியை இன்றே செய்ய ஆசைப்படுகிறேன்."

என்று நீண்ட ஒரு கடிதாசி எழுதி கட்சியின் தேர்தல் நிதிக்கு ரூ. 72 சேர்த்து நமக்கு அனுப்பி இருக்கிறார் ஒரு இந்திய சோல்ஜர்!

தங்களுடைய நிகழ்கால நெருக்கடிகளையும், எதிர்கால ஆபத்துகளையும் பற்றி நமது மக்கள் யாவரும் எப்படி தீவிரமாக கவலைப்படுகின்றனர்; ஒவ்வொரு கட்சியின் திட்டத்தையும் எப்படி தங்களுடைய அனுபவம் என்ற பூதக் கண்ணாடிமூலம் ஆராய்கின்றனர்; அதன் பிறகு நமது கக்ஷியிடம் நெருங்கி வருகிறார்கள் என்பதற்கு இது ஓர் சிறந்த உதாரணம்.

மதுரை மக்களின் அன்பையும், ஆதரவையும் பாருங்கள். காலை 7 மணியிலிருந்து 11½ மணிக்குள் வசூலித்ததில் ரூ. 420 சேர்ந்தது. எல்லாம் அரையணா, ஒரு அணா வீதமாக; தொழிலாளிகளே பெரும்பாலும் மனமுவந்து அளித்தனர். மழை வந்து வசூலை பாதித்தது என்று நமது தோழர் எழுதுகிறார்.

தீபாவளியன்று 23 ஸ்குவாடுகள் வசூலில் இறங்கினவாம்! K. T. K. தங்கமணி போன்ற முக்கிய தோழர்கள் இந்த வேலையில் முன்னின்று மக்களை உற்சாகப்படுத்தியுள்ளது. இது தவிர தோழர் ஜீவாவுக்கு பண முடிப்பாக ரூ 300 மதுரை தொழிலாளிகள் அளித்ததும் குறிப்பிடத் தக்கது.

தஞ்சை ஜில்லா தோழர்கள், தங்கள் தியாகத்தின் மூலம், அதிகார வர்க்கத்தின் அடக்குமுறை சலசலப்பையும, பெரிய மிராசுதாரர்களின் உறுமல்களையும், கம்யூனிஸ்ட் எதிர்ப்புவாதிகளின் பிதற்றல்களையும், பஞ்சாய்ப்பறக்கடிக்க கச்சையை வரிந்துவிட்டனர். கக்ஷி ஜனரல் பாடி கூட்டத்தில், ஜனவரிமாத முடிவிற்குள் தாங்களே ரூ 1000 கக்ஷிக்கு தருவதென அங்கத்தினர்களின் முடிவு. அதில், தானே ரூ. 600 தருவதாக தோழர் பாங்கல் ஸ்வாமிநாதன் வாக்களித்தார். மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்தவர்; முக்கியமான கிசான் சபா ஊழியர். 8 முழுநேர ஊழியர்கள், தங்களுடைய குறைந்த கட்சி சம்பளத்திலிருந்து ரூ. 77 தர முன்வந்தது ஒவ்வொரு கம்யூனிஸ்டையும், தேசபக்தனையும் பெருமைப்படச் செய்யும்!

தியாகத்துக்கு தாங்களே வழிகாட்டி மக்களையும் அப்பாதையிலே அழைத்துப்போகவேண்டுமல்லவா? ஏழை விவசாயத் தொழிலாளி, விவசாயி, முதலான மக்களிடமிருந்து ரூ. 10,000 வசூலிப்பதென முடிவு கட்டினர் ஜில்லா கக்ஷியினர். பலே! சபாஷ்! என்பார்கள் மக்கள். அது தான் சரி!

ஈரோடில் 4 ஸ்குவாடுகள் சென்று ஜனங்களிடம் ரூ. 103 வசூலித்துவிட்டனர். சென்னையில் ஒரு அனுதாபி ரூ. 100 தேர்தல் காணிக்கையாக அளித்திருக்கிறார்.

பணவசூலுக்கு பயமில்லை. மக்கள் கட்சிக்கு உதவ தயாராயுள்ளனர். நாம் கை நீட்டி கேட்கிறோமா, சேவை தொடர்ந்து செய்கிறோமா என்பதுதான் கேள்வி.

ரயில்வேயில் எப்படி? கோவை எங்கே? மற்ற ஸ்தலங்கள் எந்த நிலைமையில் உள்ளன?

—ஆர். கே. கண்ணன்.

# மகத்தான வச்சிராயுதம்!

(7-ம் பக்க தொடர்ச்சி)

...த்தின்படி, உள்ள தொழிலாளிகளின் வேலை நேரத்தை ...த்து மற்றவர்களுக்கும் வேலை ...ப்பது என்று முடிவு செய்து ...க் முடிந்தது. சில நாட்க... பலருக்கு வேலை ...ற்று.

...ழிலாளர்கள் டிஸ்மிஸ் செய்...ட்டதற்காக, பீளமேடு ராதா...ா மில்லில் ஸ்ட்ரைக் நடந்... நாம் ஒத்துழைக்க முன்... ஸ்ரீ என். ஜி. ஆர். அதை ...வில்லை. ரௌடிகளின் தர்பார் ... முடியவில்லை. பல தொழி...ள் தாக்கப்பட்டனர். வேலை ...ம் உடைந்தது. சமரசம் ...ம், பலருக்கு வேலையில்லாது ...ற்று.

...த்தபடியாக, காட்டன் மில் ...ள்ளிருப்பு வேலை நிறுத்தம். ...ளிகள் கதவடைப்பு செய்து ...னர். 25 நாட்கள் கழித்து ...ல திறந்தனர். ஆனால் கத...ப்பை எதிர்த்து சங்கம் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. ...வியேற்பட்டது.

...ல்மலை ரங்கநாதர் மில்லில் ஏற்... ஸ்ட்ரைக்கிலும் தோல்வியே! ...தொழிலாளிகளுக்குமேல் வேலை ...னர்.

... போராட்டங்களிலும்போது ...மிருந்த காலத்திலும் இவர் ...ாண்பித்த மனோபாவத்தைக் ...பிட்டுள்ளோம். 1942 ஆகஸ்ட் ...ங்களின்போது இவர்களின் ...கையும், எடுத்த பங்கையும் ...புள்ளோம். தவறான பாதை ... சென்றதால் தொழிலாளர் ...யில் பிளவும் சோர்வும் ...ன்றி சங்க பலம் குன்றியிருக்கி... இதற்குக் காரணமென்ன? ...தொழிலாளர்ப் போராட்டத்தை ...மாக நடத்துவதில் நம்பிக்கை ...ன்மை! அஹிம்சையின்பெயரால்! ...க்கப் போராட்டம் என்பது கம்யூ...ஸ்டுகளின் சிருஷ்டி என்ற கண்...டம். "முதலாளியுடன் ஒத்துப் ... முடியும். தொழிலாளிகள் ...ாட்டத்தில் தீவிரமாகப் போக ...ண்டியதில்லை" என்ற, முதலாளி... "தர்மகர்த்தாக்கள்" என்ற ...ள்கையில் நம்பிக்கை. இதனால் ...டும் விளைவுகள் என்ன? முத...ளைவிட கம்யூனிஸ்டுகள்தான் ...ளுக்கு பரமவைரிகள்! அவர்களுடன் ஒற்றுமைப்பட்டு தொழிலாளருக்கு சேவை செய்ய மறுத்து வருகிறார்கள் பல வருஷங்களாக, ஆனால் சங்கத்தின் மகா நாடுகளில் மில் மானேஜர்களுக்கு ஸ்தானமுண்டு, நல்ல வார்த்தைகள் உண்டு! அரை குறையான போராட்டங்களை நடத்தி முதலாளியுடன் சமரஸம் செய்து கொள்வோம் என்பது தான் இவர்களின் போர்த்திட்டமாக ஒவ்வொரு சமயத்திலும் அமைகிறது. தோல்வி யடைவதில் ஆச்சரியமென்ன?

இந்த சங்கத் தலைவர்களின் துஷ்பிரசாரத்தையும், எதிர்ப்பையும் பொருட் படுத்தாது, இந்த சங்கத்துடன் ஒன்றுபட நமது மில் தொழிலாளர் சங்கம் பாடுபட்டது. ஒற்றுமைக்காக, நமது சங்கத்தைக் கலைத்து அந்த சங்கத்துடன் சேரவும் தயார்; ஆனால் ஜனநாயக முறையில் தேர்தல் நடத்த வேண்டும், தொழிலாளி வர்க்கத்தின் முடிவுகளின்படி போராட்டங்களை நடத்த வேண்டும் என்றும் 1943-44-ல் நாம் முடிவு செய்து அறிவித்தோம். அதற்கும் இணங்க மறுத்தனர்.

பிளவு இன்று நீடிப்பது 40,000 தொழிலாளருக்கும் பிராணபத்தானது. யுத்த பிற்கால பிரச்சினைகள் பல தீர்க்கப்படவேண்டும். வேலைக்கு ஆபத்து என்ற பயங்கர நிலைமை யொழிய வேண்டும். எதிரே வந்து கொண்டிருக்கும் பல ஜீவ மரணப் போராட்டங்களுக்கு தொழிலாளிகள் ஒன்றுபடுவது அவசியமாகிவிட்டது. இல்லையேல் போன பொது வேலை நிறுத்த நிலைமைதான் இருக்கும்.

இந்த ஒற்றுமைக்காக, நமது செங்கொடியை உயர்த்திப் பிடிக்கிறோம்! இன்றைக்கும் ஒற்றுமைக்குத் தயார் என்று நாம் அறிவிக்கிறோம். தேர்தலில் இந்த ஒற்றுமைப்பாதைக்காக பிரச்சாரம் செய்வோம். இரு சங்கங்களும் ஒன்றுபட்டு, எதிர்காலப் போராட்டங்களுக்கு தயார் செய்யுங்கள் என்று கோரும் தொழிலாளர் யாவரும் தோழர் பி. ராமமூர்த்திக்கு வோட்டுப் போடுவதுதான் வழி. அந்த சங்கத்து தலைவர்களுக்கு தொழிலாளி மக்களின் விருப்பம் எப்படிப்பட்டதுஎன அறியச்செய்ய வேண்டியது சிங்காநல்லூர்-கோவை தொழிலாளி வர்க்கத்தின் தீராக் கடமையாகும்.

# இரண்டரை வருடப் போர்

(5-ம் பக்க தொடர்ச்சி)

பலத்தால் நிர்ப்பந்தப்படுத்தப்பட்ட அரசாங்கம் 25-12-44ல் முக்கூட்டு மகாநாட்டைக் கூட்டியது. மிராசுதார்களின் பிரதிநிதிகளுடனும் அதிகார வர்க்கத்தின் பிரதிநிதிகளுடனும் சம அந்தஸ்தில் அமர்ந்து கிஸான் சபை போராடியது. இது ஒரு மகத்தான வெற்றி.

தென்பரையில் செங்கொடியை உயர்த்தியதுமுதல் அல்லும் பகலும் கிஸான்களுக்குத் தொண்டாற்றி வரும் மணலி கந்தசாமி கிஸான்கள் சார்பாக வாதாடினார், விவசாயி பரம்பரையில் பிறந்து, காங்கிரஸ் சேவையில் வளர்ந்து, ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் உதவிகாரியதரிசி பதவிக்கு உயர்ந்த தேசபக்தமணி மணலி. அதன் வளர்ச்சியின் பிரதிபலிப்பாக, கம்யூனிஸ்டு கட்சியில் சேர்ந்து, கிஸான் இயக்கத்தைக் கட்டினார்.

முக்கூட்டு மகாநாட்டில் கிஸான் சபை வென்றது. நீக்கப்பட்டவருக்கு வேலை கொடுப்பதாக மிராசுதார்கள் வாக்களித்தார்கள். சங்கத்தில் சேர்ந்தால் பழி வாங்கமாட்டோமென்று உறுதிமொழியளித்தார்கள். கூலியை 50 சத வீதம் உயர்த்தவும் இணங்கினார்கள்.

ஆனால் ஜென்மத்தோடு பிறந்த வர்க்கபுத்தி போகுமா? ஒப்பந்தத்தில் இட்ட கையொப்பம் காய்வதற்குள், அதை மீறினார்கள். குண்டர்களை நியமித்து, ஊழியர்களை தாக்கித் தீர்த்துக்கட்ட சூழ்ச்சி செய்தனர். 8-1-45ல் தோழர் ராமானுஜமும் ஆறு தோழர்களும் தாக்கப்பட்டார்கள். ஒரு ஹரிஜன ஊழியருக்கு இரு கையிலும் அரிவாள் வெட்டு. ராமானுஜத்துக்கு தலையில் வெட்டு. மயங்கிவிழுந்த ராமானுஜத்தைத் தூக்கிக்கொண்டு போய், வேறிடத்தில் போட்டுவிட்டுப் போய் விட்டார்கள். போலீஸ் அதன் பங்கை செய்தது. 101 விவசாயிகள் கைது செய்யப்பட்டனர். அபராதம் விதிக்கப்பட்டனர், ஜாமீனில் விடுதலையானார்கள்.

### தடை

இதன்பின் வந்தது அதிகாரவர்க்கத்தின் அடுத்த தாக்குதல். 13-1-45ல் மன்னார்குடி, திருத்துறைப்பூண்டி தாலூகாக்களில் கிஸான் சபை கூட்டங்கள் போடுவதைத் தடை செய்தனர். மிராசுதார்-அதிகாரவர்க்கக் கூட்டுறவு கிஸான் இயக்கத்தை நசுக்கிவிடத் தீர்மானித்து விட்டது! வாரம் கிடையாதென்றனர்; கூலி இல்லை போ என்றனர். பட்டினிபோட்டு விவசாயிகளைப் பணியவைத்து விடலாமென்று மனப்பால் குடித்தனர்.

கிஸான் இயக்கத்தின் கொள்கைப் பிடிப்புக்கும் கட்டுப்பாட்டுக்கும் வந்த ஜீவமரண சோதனை இது. ஆனால் கிஸான்கள் வெற்றி பெற்றனர். வாய்க்கால் வெட்டினார்கள்: மேடுபள்ளம் நிரவினார்கள்; எரு அடித்தார்கள். எல்லாம் மிராசுதாரின் எதிர்ப்புக்கிடையே.

### வெளியேற்றம்

கிஸான் இயக்கத்தின் ஜீவ சக்தியைக் கண்டு மிரண்ட அதிகாரவர்க்கம் மணலி கந்தஸாமியையும், ஜில்லா கிஸான் சபை தலைவர்—அமிர்தலிங்கத்தையும் ஜில்லாவிலிருந்தே வெளியேற்றினார்கள். நிலச்சுவான்தார்கள் ரௌடித்தனத்தில் முழு மூச்சுடன் இறங்கினார்கள். நள்ளிரவில் புகுந்து சேரிகளைச் சூறையாடினர்; குடிசைகளை துவம்ஸம் செய்தனர். மண் பாண்டங்களை உடைத்தனர். இவ்வளவுக்கும் ஈடு கொடுத்தது கிஸான் சபை.

எப்படி? கிஸான் சபை ஒரு சில கிளர்ச்சிக்காரர்களின்சொந்தவேலையல்ல. விழிப்படைந்த விவசாயிகளின் இயக்கம். அவர்கள் சமூகத்திலிருந்தே புதிய தலைமை பிறந்து விட்டது. சோழப்பாண்டி ராமானுஜம் சாதாரண விவசாயி மகன் தான்; இன்று அவர் குடியானவர்களின் அரசியல் தலைவர். தோழர் வெங்கடேசன் இராப் பள்ளிக்கூடத்தில் எழுதப்படிக்க கற்றுக் கொண்ட உழவர்தான். சாகுபடிக்கு

(2-ம் பக்கம் பார்க்க)

# ★ "நோய்நொடிகள் வராமல் உங்களைப் பாதுகாக்கிறோமே, ★

## எங்களுக்கு என்ன செய்கிறீர்கள்?"

*ஒவ்வொரு நகரத்திலும் ஜனத்தொகை பெருகி வருகின்றது; போதிய வீடுகளின்றி ஜனநெருக்கம் அதிகமாகி வருகிறது. சரியான உணவு இன்றி உளுத்த அரிசியும், சோளமும் லக்ஷக்கணக்கான மக்களின் ஆகாரமாகி விட்டது. உடல் நிலையில் கோளாறு; வீடுகளிலே, வீதிகளிலே, துப்பை மயம். இதனால் காலரா, மலேரியா, பிளேக், அம்மை வந்தால் ஆயிரக்கணக்கிலே மக்கள் சாகின்றனர்—கோயமுத்தூரிலும், மலபாரிலும் இக்காட்சிகளை தமிழ் மக்கள் காணவில்லையா? மக்களின் சுகாதாரத்தில் மக்களை தீவிரமாக கவனஞ் செலுத்தவேண்டி ஏற்பட்டிருக்கிறது.*

**பி. கருப்பண்ணன்**

இந்தப் பக்கத்தில் நீங்கள் காணும் படங்கள் சென்னை கார்ப்பரேஷன்கீழ் வேலை செய்யும் நகர சுத்தி தொழிலாளர்களின் வாழ்க்கை, வேலை நிலைமைகளை சித்தரிக்கின்றன. இவர்களது பொறுப்போ மகத்தானது. மனித சமூகத்தின் அஸ்திவாரத் தேவையான சுகாதாரப் பாதுகாப்பு இவர்களின் கையிலே இருக்கிறது. 13 லட்சம் ஜனத்தொகையுள்ள சென்னை நகரத்தின் சுகாதாரத்தைக் கவனிக்க பத்தாயிரத்துக்கு மேலாகவே தொழிலாளிகள் பாடுபடுகிறார்கள். ஆனால் அவர்களின்பாடு எப்படி? "தீண்டத் தகாதவர்கள்" இவர்களைக் கவனித்துக்கொள்ள சமூகத்துக்கு கண் இல்லை; நகர வெளிப்புறங்களிலே, சுகாதாரவசதி அறவே இல்லாத சேரிகளிலே வாசம்; சம்பளம் ரொம்ப குறைவு. தகப்பனும், தாயும், பிள்ளைகளும் சேர்ந்து வாழ்நாள் முழுதும் உழைத்தாலும் மேலெழும்பமுடியாது. கல்வி அறிவு இவர்களுக்கு இல்லை. ஏழைக் குழந்தை வளர்ப்பு மகா பயங்கரமானது.

பத்தாயிரம் பேரில் கிட்டத்தட்ட 2000 பேர் பெண்கள். ரோடு வேலை, குப்பை வாரிக்கொண்டுபோய் கொட்டுவது, வீதி சுத்தம் செய்வது, இவைபோன்ற பல வேலைகளில் ஈடுபட்டுள்ளனர்.

### எது முன்னே? எது பின்னே?

நகரத்தின் சுற்று வட்டாரங்களில் இவர்கள் வாசம், பள்ளத்தாக்குகளிலே சேரிகள். 1943-ல் வெள்ளம் வந்தபோது பல குடும்பங்கள், தங்களுடைய சகலத்தையும் பறிகொடுத்து, நடுத் தெருவிலே நிற்க வேண்டியதாயிற்று. திருவல்லிக்கேணியில் ராம் நகர், துவாரகாபுரி ஏரியாக்கள், மைலாபூர், மாம்பலம், ளூளை பல ஸ்தலங்களிலும் வசிக்கின்றனர். சேறும், புழுதியும், துர்நாற்றமும் சுற்றுப்புறத்திலே. இந்த சேரிகளை யொழித்து, இவர்களுக்கு கார்பரேஷன் வசதியான வீடுகளை கட்டித்தர வேண்டுமென்று பல முறை ஜனங்களும், தொழிலாளரும் கிளர்ச்சி செய்தும், தீர்மான அளவிலேதான் அவை இருக்கின்றன. பணக்கார மத்திய வகுப்பாரின் சௌகரியத்தைக் கவனிப்பதிலே மட்டும் துடித்து முன்வந்து 1000 பங்களாக்கள் கட்டி முடிக்க யுத்தம் முடிந்ததோ இல்லையோ கார்ப்பரேஷன் திட்டமிட்டுள்ளது! எது முன்னே, எது பின்னே என்ற யோசனை பிறக்கவில்லை.

நகரத்தை சுத்தி பண்ணும் தொழிலாளி

வேலை முறையா? எல்லா நகர சுத்தி தொழிலாளரும் ஒரே குரலில் சொல்லும் முதல் புகார் இது தான். லஞ்சப் பிசாசு! இந்தப் பேய் பல மேஸ்திரிகளையும், சூபர்வைசிங் சிப்பந்திகளையும் கெட்டியாகப்பிடித்துக்கொண்டிருக்கிறது; அவர்கள் தொழிலாளிகளை இறுக்கிப்பிடித்துக்கொள்கின்றனர். அவ்வளவுதான். வேலை உயர்வு வேண்டுமா, வேலை கிடைக்க வேண்டுமா, வேலையிலே மண் விழாமலிருக்க வேண்டுமா—வை கீழே இரண்டு ரூபாய்! பண ரூபத்தில் இந்த லஞ்சம். வேலை ரூபத்திலும் லஞ்சம் வாங்கப்படுகிறது. சொந்தக் காரியங்களையும் இவர்களைக் கொண்டு சாதிப்பது!

### போதாத சம்பளம்

தொழிலாளிகளுக்கு இதுவரை யூனிபாரம் துணி வழங்கியதே இல்லை. துணியை தொழிலாளிகளே வாங்கிக் கொள்ளவேண்டும். சம்பளம் மிகவும் குறைச்சல். கூலி (பையன்கள்)களுக்கு மாதம் ரூபாய் ஆறு! ரோடு, தோட்ட வேலைசெய்யும் பெண்களுக்கு ரூபாய் 10ம், வீதி சுத்தம் செய்யும் பெண்களுக்கு ரூபாய் 16ம் தான். பல தொழில்களைப் பார்க்கும் ஆண் தொழிலாளிகளுக்கு ரூ. 16 லிருந்து ரூ. 21 வரைதான். பெரும்பாலோர் ரூ. 16 தான் வாங்குகின்றனர். பஞ்சப்படி சமீபகாலம்வரை ரூ. 10 தானிருந்து வந்தது.

எல்லா வகைகளிலும் ஒடுக்கப்பட்டு, பிற்போக்கிலே வைக்கப்பட்டிருக்கும் இத் தொழிலாளிகள் சென்ற வருடம் மே மாதத்தில் பொது வேலை நிறுத்தம் செய்தனர். கார்ப்பொரேஷன் அதிகாரிகள் கவனிப்பதாக வாக்களித்ததின் பேரில் வேலைக்குத் திரும்பினர். ஆனால் சமீபகாலம்வரை தீர்க்கப்படவே இல்லை. இருந்த சங்கம் ஆண்டு முழுதும் ஆழ்ந்த நித்திரையிலிருந்தது. பிரச்னைகளின் நெருக்கடியால் உந்தப்பட்டும், தூங்கும் சங்கத்தின் மீது வெறுப்படைந்தும் தொழிலாளிகள் கார்பரேஷன் லேபர் யூனியன் என்ற வேறு சங்கத்தை அமைத்துக் கொண்டனர். கூட்டங்களும், ஊர்வலங்களும் நடத்தி பலமான கிளர்ச்சி செய்து வருகின்றனர்.

### சங்கத்தின் வெற்றி

அவர்களின் சங்கம் பல வெற்றிகளைக் கண்டிருக்கிறது. பஞ்சப்படி ரூ. 10லிருந்து 16க்கு உயர்ந்ததுமட்டுமல்ல. 19-9-45ல் நடந்த யூனியன் ஜனரல்பாடி கூட்டத்தில் 42 கோரிக்கைகளைக்கொண்ட ஒரு மகஜர் தயாரிக்கப்பட்டு கார்பொரேஷன் கவுன்சிலுக்கும், இதர அதிகாரிகளுக்கும் அனுப்பப்பட்டது. 25-10-45 சங்க பொதுக் காரியதரிசி தோழர் பி. கருப்பண்ணனும், சங்க அட்வகேட் ஸ்ரீ வி. வெங்கடராமன் அவர்களும் கார்பரேஷன் கமிஷனரை மகஜர் விஷயமாக பேட்டி கண்டனர். பல விஷயங்கள் கமிஷனருக்கு தெளிவாக்கப்பட்டன. பலவற்றை உடனே கவனிப்பதாக வாக்களித்தார். உதாரணமாக, ரோட் தொழிலாளிகளில் 'டெம்பரரி' ஆட்களுக்கு ரூ 1-2-0 கொடுத்து வந்ததிலே தில்லுமுல்லு நடந்து ரூ 1 தான் கிடைத்து வருகிறது என்பதை சுட்டிக்காட்டி, இந்த அநியாயம் நிறுத்தப்பட வேண்டுமென்றார்கள்; கமிஷனர் ஒப்புக்கொண்டார். ஸ்பெஷல்வேலை செய்யும் தொழிலாளர்களை பிரதி மாதமும் அவரவர்களின் டிப்போவுக்கு மாற்ற வேண்டுமென்று சொன்ன காலத்தில், "அவர்கள் தேர்ச்சியான வேலைக்காரர்கள். அவர்களை மாற்றிக்கொண்டிருந்தால் அந்த வேலையை மற்றவர்கள் செய்யமுடியாது" என்று கூறினார். அதற்கு ஸ்பெஷல் வேலைக்கு கூடுதலாக சம்பளம் போட்டுத் தருவதாக ஏற்றுக்கொண்டார். அடுத்தபடியாக 25 வருஷ சர்வீஸ் உள்ள தொழிலாளிகளை வேலையை விட்டு நிறுத்துவதாக கமிஷனர் சர்க்குலர் அனுப்பியிருந்ததை வாபீஸ் பெற்றுக் கொள்ள கமிஷனர் ஏற்றுக் கொண்டார்; வயது 56 ஆகாத எந்த ஆளையும் வேலையைவிட்டு நிறுத்துவதில்லை எனவும் வாக்குறுதியளித்தார்.

பி. கருப்பண்ணன்
சங்க காரியதரிசி

30-10-45-ல் நடந்த கார்பொரேஷன் கவுன்சில் கூட்டத்தில் கார்ப்பரேஷன் லேபர் சப் கமிட்டியின் மகஜரை தோழர் வி. சக்கரை செட்டியார் சமர்ப்பித்து நிறைவேற்றப்பட்டது. அதில் குறிக்கத்தக்கன பின்வருபவை:

1. ஒவ்வொரு ஆண் தொழிலாளிக்கும் ரூ. 20-ல் ஆரம்பித்து, வருடத்திற்கு ரூ. 1 ஆக 25 வரை சம்பளம் நிர்ணயித்தல், பையன்-பெண்களுக்கு ரூ. 15-ல் ஆரம்பித்து வருடத்திற்கு ஒரு ரூபாயாக ரூ. 20 வரை நிர்ணயித்தல்.
2. ஒவ்வொரு தொழிலாளிக்கும் வருடத்தில் சம்பள லீவ் இன்றிருக்கும் 15 நாட்களுக்குமேல், கூட 10 நாட்கள் அதிக லீவ் அளித்தல்.
3. பிராவிடண்ட் நிதி, கிராஜுவிடி முதலிய திட்டங்களை அளித்தல்.
4. ஸிக் லீவுக்கு சம்பளம் உண்டு.
5. யூனிபாரம் துணி முதலியன வழங்கப்படவேண்டும்.

அங்கீகரிக்கப்பட்ட இந்த கோரிக்கைகளை காலந்தாழ்த்தாது நிறைவேற்றும்படிச் செய்ய தொழிலாளர்கள் என்றென்றைக்கும் உஷாராக இருந்து வரவேண்டும். சங்கத்தைப் பலப்படுத்த வேண்டும்.

மாகாண முழுவதுமுள்ள முனிசிபல் தொழிலாளிகளுக்கு வழிகாட்டிகள் என விளங்கவேண்டும்.

கொதிக்கிற வெய்யலிலே அலுப்பு சலிப்பு இல்லாமல் ஜனங்களுக்காக வேலை செய்கிறார்கள்.

இதற்கு வீடு என்று பெயர்!

ஒரு நாளைக்கு இவ்விதம் குப்பைகளை எடுத்துச் செல்லாவிட்டால் வீதியில் நடக்கமுடியாது; வீட்டில் வசிக்கமுடியாது!

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

தொழிலாளிகள் திரண்டனர். கிளர்ச்சி பலப்பட்டு வருகிறது.

சில நாளைக்கு முன்னர்தான் கம்பெனிகள் சங்கங்களும் தொழிலாளி சம்பள விகிதத்தைப்பற்றி ஒரு அறிக்கை தந்தார்களாம். அதில் சம்பளம், வீட்டு வாடகை, நஷ்ட ஈடு, ஆஸ்பத்திரி செலவு, சர்வீஸ் கிராஜியூடி முதலியனவற்றை யெல்லாம் கூட்டிப்போட்டு ஒவ்வொரு தொழிலாளிக்கும் சராசரி சம்பளம் ரூபாய் 41 கொடுத்து வருவதாக காண்பிக்க முயற்சித்துள்ளனர். நஷ்ட ஈடு கணக்கை எல்லா தொழிலாளிக்கும் கணக்குப் போட்டுக் காண்பிப்பது சிரிக்கத்தக்கக் கேலிக்கூத்து! வேலை செய்ய முடியாது என அன்பிட் (Unfit) செய்யப்பட்ட தொழிலாளிக்குத் தரும் கிராஜியூடியை வேலை செய்யும், செய்துவரும் தொழிலாளிக்கும் சேர்த்து கணக்குப் போடுவது முதலாளிகளின் 'தர்மம்' தான்! வாடகைக்கு வீடுகள் தரப்பட்டவர்கள் மொத்த தொழிலாளிகளில் பாதி பேர்தான்; அந்த வாடகையும் அநியாயமானது. முதலாளிக்கே லாபகரமானது கோணல் 'மாணல்' கணக்குகள்! இவ்வாறு எத்தனை நாளைக்கு இழுத்தடிப்பார்கள் முதலாளிகள்? கம்பெனிகளின் சண்டித்தனத்திற்கும், சர்க்காரின் அசிரத்தைக்கும் எல்லை காண முடியவில்லை. அப்படியானால் தொழிலாளி வர்க்கம் தனது பொறுமைக்கு எல்லை காணுவது நிச்சயம்! 29-10-45-ல் மைசூர் மைன்ஸ் தொழிலாளரும், நந்திதுர்க்கம், சாம்பியன்ரீப் தொழிலாளரும் ஆயிரக்கணக்கிலே கூட்டங்கூடி போர்ச் சபதமெடுக்க தயாராகின்றனர்.

சமரசத்திற்கு முதலாளிகளும், சர்க்காரும் முன்வந்தாகவேண்டும். இதற்கு முன் ஏற்பட்டமாதிரி, பொது வேலை நிறுத்தம் ஏற்பட்ட பிறகு கண் விழித்த புத்திசாலித்தனம் வேண்டாம்.

## நெல்லிக்குப்பத்தில் செக்ஷன் 144 தொலைந்தது

# தொழிலாளர் வெற்றி

நெல்லிக்குப்பம் ஆலைத் தொழிலாளர்களிடையே சங்கத் தேர்தலின்போது பிளவு ஏற்படுத்த முனைந்தனர் சிலர். அவர்களுக்கு கம்யூனிஸ்டுகளை வெறுக்கும் காங்கிரஸ் வாதிகளின் ஆசீர்வாதமும் உண்டு. அவர்களை முறியடித்து கம்யூனிஸ்ட்களையே யூனியன் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுத்தது தொழிலாளிவர்க்கம். என்றாலும் தேர்தல் செல்லாது என்று ஒருசிலரின் கூச்சலைச் சாக்கிட்டு, இனிமேல் கூட்டங் கூடக்கூடாது என்று 144 போட்டு தொழிலாளர் உரிமையைப் பறித்தது அதிகாரவர்க்கம். தொழிலாளர்களின் கிளர்ச்சி வலுத்தது.

7-11-45-ல் ஜில்லா கலெக்டர், டி. எஸ். பி., பப்ளிக் பிராஸிகியூடர், ஜில்லா லேபர் ஆபீஸர் முதலிய சர்க்கார் அதிகாரிகளும், தோழர்கள் கோவிந்தராஜன், வீராசாமி, பக்கிரி முதலிய யூனியன் பிரதிநிதிகளும், தேர்தல் செல்லாது என்று வாதாடியவர்களான சிவஞானம், ஆர். பி. தங்கவேலு, வெங்கடேசன் ஆகியோரும், ஜெனரல் மானேஜர், கம்பெனியின் லேபர் வெல்பேர் ஆபீஸர் ஆகியவர்களும் அடங்கிய மகாநாடு கூடியது. உள்ளூர் காங்கிரஸ் பிரமுகர் ஜனாப் இப்ராஹீம் அவர்களும் பிரசன்னமாயிருந்தார். விவாதம் 3 மணி நேரம் நீடித்தது.

**10-10-45**-ல் நடைபெற்ற தேர்தல் செல்லுபடியாகும்—144 தடை உத்திரவு வாபஸ் பெறப்படவேண்டும்—என்று விவாதித்த பிற்பாடு "தொழிலாளிவர்க்கம் எங்கள்மீது கொண்டுள்ள நம்பிக்கையைத் தெரிவிக்க எத்தனை தேர்தல்கள் வேண்டுமானாலும் வைக்க தயார்" என்று யூனியன் பிரதிநிதிகள் தெரிவித்தார்கள். இதை அனைவரும் ஒத்துக்கொண்டார்கள்.

15 நாள் நோட்டீசுக்குப் பின் தேர்தல் நடக்கும். தொழிலாளிவர்க்கத்தின் ஒற்றுமையால் 144 தடை உத்திரவு தகர்ந்தது. ஜனநாயகத் தீர்ப்பு செங்கொடிக்கு ஜெயமளிப்பது திண்ணம்.

# தங்கச் சுரங்கத்திலே குமுறல்!

## என்றைக்கும் வெடிக்கலாம்

கோலார் தங்கவயல்களில் ஒரு பிரம்மாண்டமான பொது வேலை நிறுத்தம் நடந்து ஆறு மாதங்கள்தான் ஆகின்றன. அதற்குள் மறுபடியும் வேலை நிறுத்தப்புயல் வீசும்போலிருக்கிறது! 18,000 தொழிலாளர்கள் அன்று வேலைநிறுத்தம் செய்துவிட்ட பிறகு, மைசூர் சர்க்கார் குறுக்கிட்டு சமரசம் செய்ய முன் வந்ததால், வேலைக்கு தொழிலாளிகள் திரும்பச் சென்றனர். ஆனால் ஆறு மாதங்கள் கடந்தனவே யொழிய, குறைகள் ஒழிந்தபாடில்லை. தங்கவயல் முதலாளிகளும், சர்க்காரும் இதுவரை இழுத்தடித்து வருகின்றனர்,

சங்கங்களின் கோரிக்கை இதுதான். தங்கச் சுரங்களில் பூமிக்குள் வேலை செய்வோருக்கு தினசரிகூலி 0-14-0 வீதமும், பூமிக்குமேல் வேலை செய்வோருக்கு 0-12-0 வீதமும் பொதுவான குறைந்தபட்ச கூலி நிர்ணயித்துவிட வேண்டும். இந்த அடிப்படையில் எல்லா தரப்பட்ட தொழிலாளிகளுக்கும் குறைந்தபட்ச, அதிக பட்ச கூலியை நிர்ணயிக்கும் முறையில் இன்றுள்ள கூலி விகிதத்தை மாற்ற வேண்டுமென்பதுதான் கோரிக்கை. இது மிதமான, நியாயமான கோரிக்கையாகும். 1931-ம் வருஷத்திலேயே, கோலார் தொழிலாளரின் நிலைமைகளை விசாரணை செய்ய சர்க்காரால் நியமிக்கப்பட்ட ஸ்ரீ சீனிவாசன் என்பவர் "அன்றே குறைந்தபட்ச கூலி ரூ. 20 என நிர்ணயித்துவிட வேண்டு"மென சிபார்சு செய்தார். அதற்குப் பிறகு, 1940 ல் திவான்பகதூர் மாதவன் என்பவர் (சர்க்காரால் இவரும் நியமிக்கப்பட்டவர்) பூமிக்குள் வேலை செய்யும் ஒவ்வொரு தொழிலாளிக்கும் 0-12-0 அணு கூலி நிர்ணயிக்க வேண்டுமென்று சிபார்சு செய்து விட்டுப் போனர். அந்த சிபார்சுகள் ஏட்டளவிலேதான் இருந்தன. இன்றோ? விலை வாசி உயர்வும், சரக்குகளுக்கு பஞ்சமும் ஏற்பட்டுள்ள காலம். அதிலும் தங்கவயல் தொழிலாளர்களுக்குக் கிடைத்து வந்துள்ள பஞ்சப்படி வெறும் கண் துடைப்பாகவே இருந்துவிட்டது. அதாவது, மாதம் ஒன்றுக்கு ரூ. 9-8-0 தான்! இதை.வாசிக்கும் இதர தொழிலாளிகளையே தூக்கி வாரிப்போடும்! சர்க்கார் குமாஸ்தாக்களும் முனிசிபல் சிப்பந்திகளும்கூட 15 ரூபாய் பஞ்சப்படி வாங்கிய காலமுண்டு! ஆகவே, இன்று சங்கங்கள் கேட்கும் கோரிக்கையை நியாயபுத்தியுள்ள மக்கள் யாவரும் நியாயம்தான் என்று ஒப்புக்கொள்வார்கள்.

### சமரசப் பேச்சுகள்

இதற்காக சங்கங்கள்—மைசூர் மைன்ஸ், ஊரிகாம், நந்திதுர்க்கம் சாம்பியன் ரீப்ஸ் தொழிற் சங்கங்கள்—அனைத்தும் முதலாளிகளையும் சர்க்காரையும் வைத்து சமரசம் செய்துகொள்ள முயன்று வந்துள்ளன. ஆனல், இதுவரை பயன் கிட்டவில்லை. சமரசப் பேச்சுகள் நீண்டு கொண்டே வருகின்றன.

சென்ற 14-9-45-ந் தேதி யன்று நடந்த சமரசப் பேச்சு கூட்டத்தில் சங்கத்தலைவர்கள், இன்றிருக்கும் சம்பள விகிதத்துக்கு அடிப்படையான புள்ளி விபரங்களைத் தருமாறு முதலாளிகளைக் கேட்டனர். அதைப் பரிசீலித்தால், கம்பெனிகள் எவ்வளவு தூரம் நியாயமாக நடந்து கொண்டிருக்கிறார்கள், எந்த அளவுக்கு சம்பள உயர்வை நிர்ணயிக்கலாம் என கண்டுகொள்ளலாம் என வாதாடினர். முதலாளிகள் இதற்கு இசையவேயில்லை. சம்பளப்பட்டியல் விபரங்களை அவ்வளவு பத்திரமான ரகசியமாக வைத்திருக்க எண்ணினல் சமரசம் எப்படி நடக்கும், எந்த அடிப்படையில் நடக்க முடியும்? மத்திய சர்க்கார் நியமித்த லேபர் விசாரணைக் கமிட்டி அதிகாரி ஸ்ரீ S. R. சுந்தரம் என்பவருக்கே கொடுக்க மறுத்து ரகளை செய்த பேர்வழிகள் இந்த முதலாளிகள். அமுக்கல் கொள்கையிலே அவ்வளவு ஊற்றுதல்! இதில் விசித்திர மென்னவென்றல், மைசூர் சர்க்காரின் பிரதம கன்ஸிலியேடரும் முதலாளிகள் பக்கமே இருந்தாராம்!

### அர்த்தமற்ற வாதம்

4-10-45-ந் தேதி நடந்த சமரசப் பேச்சுகளிலும் முதலாளிகள் கோணல்வாதங்களில் இறங்கினர். இதர தொழில்களில் கிடைத்துவரும் சராசரி சம்பள விகிதங்களை சேகரித்துப் பார்த்து, அதற்கு தகுந்தபடிதான் தங்கள் கம்பெனிகளிலும் கூலியை நிர்ணயிப்போம் என்றனர். இரண்டாவதாக கம்பெனிகளின் லாப நஷ்ட நிலவரத்தைப் பார்த்துதான் சம்பள உயர்வைப்பற்றி யோசிக்க முடியுமென்றும் வாதாடினர். அதற்குச் சங்கத்தலைவர்கள் அளித்தபதில்களென்ன? சொந்த கம்பெனி சம்பள விகிதப் பட்டியல்களையே முதலாளிகள் மறைத்து வைத்துக் கொண்டால், இதர தொழில்களில் தரப்படும் சம்பள விகிதங்களை பரிசீலனை செய்வதில் அர்த்தமில்லை என்றனர். மேலும், தங்கச் சுரங்கத் தொழிலையும், இதர தொழில்களையும் ஒத்திட்டுப் பார்ப்பது அசம்பாவிதம், நியாயமல்ல வென்றும் கூறினர். லாப நஷ்ட கணக்கை மட்டும் கவனிப்பது என்ற முதலாளி வாதத்துக்கும் ஆப்பு அடித்தனர். சுரங்கங்களை நிர்வகிப்பதிலே தொழிலாளிக்கும் பங்கு கிடைக்கும் வரையில், லாப நஷ்டக் கணக்கை வைத்துத் தொழிலாளியின் சம்பளத்தை கணக்குப் போடக்கூடாது. கோலாரில் தொழிலாளி வாழ்க்கை சீர்குலைவு, தொழிலாளி குடும்பத்தின் குறைந்தபட்ச தேவை, கம்பெனியின் பொருளாதார பலம் முதலிய விஷயங்களை அடிப்படையாகக் கொண்டுதான் நிர்ணயிக்க வேண்டுமென்றனர்.

### முறிந்த மாதிரிதான்

இதர தொழில்களின் சம்பள புள்ளி விபரங்களை பரிசீலிக்க முதலாளிகளுக்கு புதிய காதல் பிறந்தது ஆச்சரியமே! பஞ்சப்படி போராட்ட காலத்தில் மற்ற தொழில்களில் கொடுக்கப்பட்ட விகிதங்களை சங்கங்கள் சுட்டிக்காட்டியபோது, இதே முதலாளிகள் "அவை நமக்குத் தேவையில்லை" என்றதை தொழிலாளி வர்க்கம் மறந்துவிடவில்லை! காலத்தை வீணைக் கழித்து, தொழிலாளிகளை அலைக்கழித்த முதலாளிகள் இவ்வாறு பேசுகின்றனர்.

பேச்சுகள் இன்று முறிந்தமாதிரிதான். தொழிலாளிகள் 4-10-45 சாயந்திரம் 6000 பேர் கூடி எவ்வித போராட்டத்திற்கும் தயார் என சபதமெடுத்தனர். இதர சங்கக் கூட்டங்களிலும் ஆயிரக்கணக்கிலே

(9-ம் பக்கம் பார்க்க)

மதுரை

# ராஜா மில் தொழிலாளர் போர்முரசு

## பஞ்சப்படி வெட்டு தவிர்க்கப்பட்டது

கருமியிலே கருமி மஹா கருமி மதுரை ராஜா மில் முதலாளி ஸ்ரீ கனகவேல் நாடார். யுத்தம் நின்றதுதான் சாக்கு, உடனே பஞ்சப்படியில் கையை வைத்தார். மதுரையிலுள்ள சகல மில்களிலும் வெற்றி போனஸும், லீவும் கொடுக்கப்பட்டது; ஆனல் ராஜா மில்லில் மட்டும் அதைப்பற்றி பேச்சு மூச்சில்லை. இவரிடம் போனஸ் வாங்குவதற்குள் எந்தப் பாம்பு வாயிலும் படாமல் பரமபதம் போகணும். இதில் வெற்றி பெறுபவர்கள் கால்வாசிப் பேர்தான். தீபாவளி போனஸிலும் இதே கதிதான்.

இதுதான் இப்படியென்றல், மெஷின்களோ, ஐதர் காலத்து மாடல். மாதத்திற்கு 100 ஊசிகள் பட் பட்டென்று தெறிக்கின்றன. அதனுடைய செலவு தொழிலாளிகளின் தலையில் கட்டப்படுகிறது. மெஷின்கள் நல்லாயிருக்க அடிக்கடி எண்ணை போடணுமே, பழுது பார்க்கணுமே என்ற அக்கரையெல்லாம் முதலாளிக்குக் கிடையாது. ஆனல் தொழிலாளர்களைப் பழி வாங்குவதில் மட்டும் சூரத்தனம் முன் நின்று கூத்தாடுகிறது.

துணியில்லை நூலில்லையென்று பொதுமக்களும் நெசவுத் தொழிலாளிகளும் கதறுகிறர்கள். ஆனல் மதுரை ராஜா மில் நிர்வாகம் நூல் உற்பத்தியைக் கெடுக்கும் பணியில் தீவிரமாய் முனைந்து கொண்டிருக்கிறது, தொழிலாளர்களைப் பலவிதத்திலும் ஆத்திரமூட்டுகிறது.

### 200 பேருக்குத்தான் போனஸ்

போனஸ் வாங்குவதற்கு பல கடுமையான அனியாயமான நிபந்தனைகள் விதிக்கப்பட்டன. 2 வருட சர்வீஸ் இருக்கவேண்டுமாம். வேலையில்லாததின் காரணமாக நிர்வாகமே வீட்டிற்கு அனுப்பின நாட்களும், டாக்டர் லீவ், பிரசவ லீவ் ஆகிய நாட்கள் உட்பட 30 நாட்களுக்குமேல் லீவ் எடுத்தவர்களின் போனஸில் மண் அடிக்கப்பட்டது, மில் கோவாப்ரேடிவ் ஸ்டோர் மெம்பராயிருந்தால்தான் போனஸ்என்ற நிபந்தனையும் போடப்பட்டு சங்கத்தின் கிளர்ச்சியால் கைவிடப்பட்டது. இவ்விதமாக மொத்தம் 700 பேரில் 200 பேருக்கே போனஸ் கிடைத்தது.

### பஞ்சப்படிக்கு வந்தது ஆபத்து

யுத்தம் முடியுமுன்பே தேசபக்தி பொங்கி வழியும் அஹமதாபாத் முதலாளிகள் (தர்மகர்த்தாக்கள்) தொழிலாளியின் பஞ்சப்படியில் கத்தியை நீட்டினர்கள். அதை காப்பியடித்தார் ராஜா மில் முதலாளி. 25 ரூபா பஞ்சப்படியில் $4\frac{1}{2}$ ரூபாய் முதல் 10 ரூபாய் வரையிலும் கட் செய்தார்கள். மதுரைமா நகரின் இருபதாயிரம் தொழிலாளர்களும் செய்த கிளர்ச்சியால் பஞ்சப்படி வெட்டை இம்மாத முதல் கைவிடப்பட்டது. பஞ்சப்படி வெற்றி ஒரு மாபெரும் வெற்றி. ஆனல் சென்ற 4 மாத காலமாய் குறைக்கப்பட்ட பஞ்சப்படியைத் திருப்பித்தரவில்லை. சங்கம் கிளர்ச்சி செய்து வருகிறது. நஷ்டம் வந்துவிட்டதாக அழும் இதே முதலாளிதான் புதுக்கோட்டையில் புது மில் கட்டுகிறர். மதுரையில் பணிஸ்கபே கட்டிடம் எழுப்பினர்.

எல்லா முதலாளிகளும் தீபாவளி போனஸ் கொடுத்தார்கள். ராஜா மில்லிலும் கூட வருஷா வருஷம் கொடுப்பது வழக்கம். பஞ்சப்படியை போராடிப் பெற்றுவிட்டார்களே தொழிலாளிகள் என்ற ஆத்திரம் முதலாளிக்கு! ஆகவே தீபாவளி போனஸ் விஷயத்தில் அசைய மறுத்துவிட்டார். கடைசியாக லேபர் சமரச ஆபீஸர் மூலம் சங்கம் தலையிட்டதின் காரணமாக 200 பேருக்கு தீபாவளி போனஸ் கிடைத்தது.

மற்ற மில்களில் வெற்றி தினத்தை முன்னிட்டு ஒரு மாதச் சம்பளமும், விடுமுறையும் கிடைத்தன. ராஜா மில்லிலோ லீவுமில்லை—அதற்குப் பதில் சம்பளமுமில்லை. வெற்றி போனஸுமில்லை.

### பெண்கள்படும் அவதி

டெம்பரரியாய் எத்தனை வருஷம் வேலை செய்தாலும் பெண் தொழிலாளிகளுக்கு பிரசவ சகாயநிதி கொடுப்பதில்லை. சமீபத்தில் ஒரு கேஸில் சங்கம் தலையிட்டு பிரசவ நிதி வாங்கிக் கொடுத்தது. ஆனல் அந்த பெண்ணுக்கு வேலை கொடுக்க மறுத்துவிட்டது நிர்வாகம். பெர்மனென்ட் தொழிலாளிக்கும் பிரசவ காலம் முடிந்தபின் வேலை கொடுப்பதில்லை. பல மாதங்கள் அலைய விட்டுத்தான் வேலை கொடுக்கிறது. அப்படி வேலை கொடுத்தாலும், $12\frac{1}{2}$ ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டு ஸ்பின்னிங்கில் வேலை பார்த்த அப்பெண்ணுக்கு 9 ரூபாய் சம்பளம் வாங்கும் டாபிங்பாய் டிக்கட்டு கொடுக்கப்படும். ஆனல் வாங்குவதோ ஸ்பின்னிங் வேலை! பிரசவமென்றல் பரிசு கொடுப்பது மற்ற தேசத்தில் வழக்கம். ஆனல் இங்கோ......? இனிவரும் தலைமுறை, முதலாளிகளுக்கு சுரண்டக் கொடுக்காத தலைமுறையாயிருக்குமென்று கருதிதான் பிரசவ நிதி மறுக்கப்படுகிறது போலும்!

### சம்பளமில்லா வேலை

புதிதாய் வேலைக்கு வந்தால் 3 மாதம் வரை சும்மா வேலை செய்யணும். பிறகு அரை வேலை டாபிங் பையன் வேலை கிடைக்கும். அந்த வேலைக்கு மாதச் சம்பளம் ரூ. 6. ஆனல் கொடுப்பதோ ரூ. 3. மாதா மாதம் 2 அணு வீதம் சம்பளம் ஏணிப்படியில் ஏறுமாம்! முழுச் சம்பளத்தை எட்டிப் பிடிப்பதற்குள் $2\frac{1}{2}$ வருஷங்கள் தவம் கிடக்கணும். அதுவும் சூப்ரவைஸர், மேஸ்திரி முதலியவர்களின் நெற்றிக் கண்ணுக்கு தப்பினல்தான்!

அதேபோல் அரை வேலை டாபிங் பையன், முழு வேலைக்குப் போனல் $12\frac{1}{2}$ ரூபாய்க்குப் பதில் 9 ரூபாதான் சம்பளம் ஆரம்பிக்கப் படுகிறது. முழு வேலை பழகுகிறவர்களுக்கோ 2, 3 மாத ஊதிய மில்லா உழைப்புக்குப் பின் 6 ரூபாயிலிருந்து ஆரம்பித்து, மாதம் 4 அணு வீதம் சம்பளம் ஏறுமாம். கஷ்டப்படும் தொழிலாளியின் வயிறு கபகபணு வேகுமா வேகாதா?

ரீலிங் டிபார்ட்மெண்டில் வேலைக்குத் தக்ககூலி என்றுதான் பெயர். செய்த வேலையைச் சரிவரப் பதிந்தார்களா என்று பதிவு புஸ்தகத்தைப் பார்க்கத் தொழிலாளிகளை விடுவதில்லை. பாவுக் கணக்குகள் ஒழுங்காய் எழுதுவதில்லையென பிரதி தினமும் புகார்தான்.

### ஊசிகள் உடைவது ஏன்?

மெஷின்கள் ஐதர் காலத்தவை. 26 ஸ்பின்னிங் பிரேம்களில் 6 தான் சிறிது நல்லதாக இருக்கிறது. மற்றதெல்லாம் லொடலொட்டை. ஊசிகளும் பழசு. சரிவர எண்ணை ஊற்றுவதில்லை. அடிக்கடி பழுது பார்ப்பதுமில்லை. இதனல் மாதம் 100 ஊசிகள் தெறிக்கின்றன. ஊசிக்கு 8 அணு வீதம் அபராதம் போட்டு, தொழிலாளி தலையில் கை வைக்கிறது மில் நிர்வாகம்.

ஹார்வி மில்லிலும், மீனுக்ஷி மில்லிலும் இம்மாதிரி ஊசிகள் உடைவதில்லை. ஏன்? அங்குள்ள மெஷின்கள் புதிது. இங்குகூட நல்ல 6 பிரேம்களிலும் ஊசிகள் உடைவதில்லை. இதிலிருந்தே தொழிலாளிகளின் அஜாக்கிரதையால் ஊசிகள் உடைவதில்லை யென்பது விளங்கும்.

### பழிவாங்குகிறர்கள்

தொழிற்சங்க முக்கியஸ்தர் தோழர் தங்கவேல் சேர்வை கடினமான வேலைக்கு மாற்றப்பட்டார், தள்ளாத வயதில் அவருக்கு கடும் வேலை! பஞ்சாலைத் தொழிற்சங்க நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர் தோழர் முத்துச்சாமி டெம்பரரியாக்கப்பட்டிருக்கிறர். வேலையும் சரிவரக் கொடுப்பதில்லை. அபராதமும் சஸ்பெண்டும் வளர்கின்றன.

இந்த நிலைமையில் காங்கிரஸ்வாதிகள் சிலரால் ஏற்படுத்தப்பட்டுள்ள ஐக்கியத் தொழிலாளர் சங்கத்தினர் "முதலாளி நல்லவர்" என நோட்டீஸ் விட்டனர். தொழிலாளர்களிடையே பிளவுபண்ண படாத பாடு பட்டனர். ஆனல் இவர்களை முறியடித்து விட்டது தொழிலாளி வர்க்கம். தொழிலாளிவர்க்கத்தின் மீது ராஜா மில்முதலாளி போர் தொடுத்திருக்கிறர். சமரச ஆபீஸருக்குக்கூட சரிவர பதில் அனுப்புவதில்லையாம்.

அவசியமானல் தொழிலாளிவர்க்கம் மில் நிர்வாகத்தின் சவாலை ஏற்று வெற்றி பெறுமென்பது திண்ணம். அதனுடைய வெற்றிச் செங்கொடி வானமேறி போர்முரசடிக்கிறது. மதுரையில் டிசம்பர் கடைசியில் நடைபெறப்போகும் மாகாணத் தொழிற்சங்க மகாநாட்டில் இதுபற்றி முடிவு எடுக்கப்படும். நிலைமை முற்றுமுன் சர்க்கார் தலையிடவேண்டும்.

சென்னை பி. அண்டு ஸி. மில்

# தறிகள் தூங்குகின்றன

## தொழிலாளருக்கு கேட்பாஸ்!

தீபாவளியின்போது பி. அண்டு ஸி. ஷர்ட்டிங் கிளாத் இருக்கிறதா என்று கடை கடையாய் நுழைந்து கேட்டார்கள் பொதுஜனங்கள். இன்றும் ஒவ்வொரு ஜவுளிக்கடையிலும் அதையே ஆவலுடன் கேட்கிறர்கள். இல்லையென்று கையை விரிக்கிறர்கள் ஜவுளி வியாபாரிகள்.

காரணமென்ன? மெஷின் கோளாரு? இல்லை. தொழிலாளர்கள் இல்லையா? அப்படிப்பட்ட விபரீதமொன்றும் நேர்ந்துவிடவில்லை. தொழிலாளர்கள் இருக்கிறர்கள். பி. அண்டு ஸி. மில்லில் [தறி] டிபார்ட்மெண்டில் ஏராளமான [தறி]கள் தூங்குகின்றன. கர்னடிக் [மில்]ல் தறி டிபார்ட்மெண்டில் 33—36 [—]37 இம் மூன்று சைடுகளிலும் [உட]னே 80 பேருக்கு வேலை யிருக்கிறது. இதைக் கவனிப்பதற்கு நிர்வாகத்திற்கு துப்பில்லை.

சமீபத்தில் டெம்பரரி என்று சொல்லி சுமார் 200 பேரின் தலையில் கை வைத்தது நிர்வாகம். அவர்களில் 80 பேருக்கு ஓரிருவார பயிற்சி கொடுத்தால், தூங்கும் தறிகளுக்கு அவர்களால் உயிர்கொடுக்க முடியும். ஷர்ட்டிங் துணி உற்பத்தியும் அதிகமாகும். ஆனல் நிர்வாகத்தின் கோணல் புத்திக்கு இது எட்டவில்லையே!

### காஷுயல் லீவிலும் மண்

பண்டு லீவ் என்று சொல்லி 15 நாள் சம்பளத்துடன் லீவ் உண்டு என்று சாஸனம் கூறுகிறது. "இன்று அவசர காரியம், ஒருநாள் காஷுயல் லீவ் கொடுங்கோ" என்று கேட்டால் அதிகார தேவதைகளின் முகத்தில் எள்ளும் கொள்ளும் சேர்ந்து வெடிக்கிறது. "வேலை அதிகம்—லீவ் கொடுக்க முடியாது" என சுருக்கமாகப் பதில் கிடைக்கிறது. சட்டபூர்வமாய்க் கிடைத்த வசதியைக்கூட தொழிலாளி மகன் உபயோகிக்க முடியாதபடி முட்டுக்கட்டை போடுகிறது மில் நிர்வாகம். தொழிலாளர்கள் தம்மிஷ்டம்போல் லீவ் எடுத்துக்கொள்ள வசதியளிக்கப்படுவார்களேயானல், டெம்பரரிக்காரர்களுக்கு வேலை பறி போக வேண்டிய அவசியமில்லை. அந்த 200 பேரும் தம் குடும்பங்களோடு நடுத்தெருவில் நின்று தத்தளிக்க வேண்டியதுமில்லை.

### 3 பேர் வேலை 2 பேருக்கு

பக்கிங்காம் மில் ரீலிங் டிபார்ட்மெண்டில் சென்ற 3, 4 வாரங்களாக தொழிலாளர்கள் படும் அவதி சொல்லி முடியாது. லீவில் போவோருக்கு பதில் ஆள் அமர்த்துவது கிடையாது. அதனல் 3 பேர் செய்த வேலையை 2 பேர் செய்யவேண்டியிருக்கிறது. லீவில் போனவர் திரும்பி வரும்வரையும், அவரின் வேலையைச் செய்வதே இவர்களின் தலைவிதி. இந்த லட்சணத்தில் "60 பேருக்கு வேலையில்லை" என்று 15 நாளைக்கு முன் கேட் பாஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது.

### சூழ்ச்சி பலிக்காது

இவ்விதம் கேட்பாஸ் கொடுத்தால் தொழிலாளிவர்க்கம் பயந்துபோய், உடனடிக் கோரிக்கைகளைப்பற்றி பேச்சுமூச்சு விடாது என மில் நிர்வாகம் நினைக்கிறது. தேச மக்கள் துணிக்காக லாட்டரி அடித்துக் கொண்டிருப்பதையும் தொழிலாளிகள் லீவ் வசதிகளை அனுபவிக்காதவாறும், அதிகவேலை செய்யுமாறும் வேலையை இழக்குமாறும் நிர்வாகம் கெடுபிடிகளை எதிர்க்க, விழிப்படைந்துவரும் பி. அண்டு ஸி. மில் தொழிலாளிகள் கச்சைகட்டி விட்டார்கள்.

# கிழக்காசியாமீதுள்ள கையை எடு!

## இந்திய மாலுமிகள் வேலைநிறுத்தம்

தென்கிழக்கு ஆசியாவிலுள்ள நாடுகளில் நடைபெறும் சுதந்திரப் போராட்டத்திற்கு, சோவியத் யூனியனின் பத்திரிகையான "நியூ டைம்ஸ்" கூறுவதுபோல், உலக முழுவதுமுள்ள முற்போக்கு சக்திகளின் பேராதரவு கிடைத்திருக்கிறது.

### 60 பிரிட்டிஷ் எம். பி.களின் ஆதரவு

பிரிட்டிஷ் தொழிற் கட்சியைச் சேர்ந்த 60 பார்லிமெண்டு அங்கத்தினர்கள், பிரிட்டிஷ் சர்க்காருக்கு ஓர் அறிக்கை விடுத்துள்ளார்கள்:

"பொதுமக்களுக்கு விரோதமாக நமது படைகள் உபயோகப்படுத்தப்படுகின்றன. "ஒழுங்கு முறையை"ப் பாதுகாக்க, ஜப்பானியத் துருப்புகளும் உபயோகப்படுத்தப்படுகின்றன ......... கீழ்க் கோடியில் டச்சு, பிரஞ்சு ஏகாதிபத்திய ஆதிக்கத்தை நிலைநாட்ட, நமது துருப்புகளை உபயோகிக்கக்கூடாது"

என்று வன்மையாகக் கண்டித்துள்ளார்கள்.

★

### இந்தியத் தலைவர்களுக்கு இந்தோனேஷியர் வேண்டுகோள்

பம்பாயிலுள்ள இந்தோனேஷியா மாலுமிகளின் சங்கத் தலைவர், காங்கிரஸ் தலைவர் மௌலானா அபுல் கலாம் ஆஸாதுக்கும், முஸ்லிம் லீக் தலைவர் ஜனாப் ஜின்னாவுக்கும், பண்டித ஜவஹர்லால் நேருவுக்கும் கீழ்க்கண்ட வேண்டுகோள் விடுத்துள்ளார்:

"இந்தோனேஷியாவில் நடக்கும் போராட்டத்தைப் பலப்படுத்தும் பொருட்டு நாங்கள் வேலை நிறுத்தம் செய்து வருகிறோம். இந்தியாவின் லட்சியமும், உலக முழுதும் அடிமைப்பட்டுக் கிடக்கும் மக்களது லட்சியமும், எங்களது லட்சியமும் ஒன்றே. எனவே, ஏகாதிபத்திய முறைக்கு விரோதமான நமது பொதுப் போராட்டத்தின் நலனை உத்தேசித்து, இந்தோனேஷியாவில் பிரிட்டன் தலையிட்டு வருவதைத் தடுக்கக்கூடிய முறையில், உதவி புரியும்படி வேண்டுகிறேன்.

இந்தோனேஷியாவின் சுதந்திரப் போராட்டத்திற்கு அனுதாபம் காட்டவும், பிரிட்டிஷ் தலையீட்டை ஆட்சேபிக்கவும், இந்தியத் துருப்புகளையும், மாலுமிகளையும் பயன்படுத்தி வருவதைக் கண்டிக்கவும், இந்தோனேஷியாவின் சுதந்திரப் போராட்டத்திற்கு உதவியளிக்கவும் இந்தியா முழுவதும் ஒரு நாள் கண்டன வேலை நிறுத்தத்தை ஆரம்பிக்கும்படி வேண்டுகிறேன்."

★

### பொதுவேலை நிறுத்தம்

இந்தியாவில் ஒரு புது சகாப்தம் ஆரம்பமாகியிருக்கிறது. "ஜாவாவுக்கு யுத்த தளவாடங்களை ஏற்றுமதி செய்வதில் ஈடுபட்டிருக்கும், மாலுமிகளும், கப்பல் தொழிலாளர்களும், ஜவாவுக்குச் செல்லும் கப்பல்களில் சரக்குகளை ஏற்றுமதி செய்யவோ, இறக்குமதி செய்யவோ மறுக்கவேண்டும். இந்தியா முழுவதும், ஒரு பொது வேலை நிறுத்தத்தை ஆரம்பிக்கவேண்டும். இந்தோனேஷியாவுக்கு இப்பொழுது காங்கிரஸ் உதவி புரிந்து வருவதைவிடப் பன்மடங்கு அதிகமாக, உருப்படியாக உதவி புரிய முடியுமென்று நம்புகிறேன்" என்று பண்டித ஜவஹர்லால் நேரு பத்திரிகை நிருபர்களிடம் கூறினார்.

★

### யாருட்னும் ஒன்று சேரத் தயார்

"தங்களுடைய சுதந்திரத்திற்காக போராடும் இந்தோனேஷியா மக்களுக்குத்தான் நமது அனுதாபமும் ஆதரவும். இந்த விஷயத்தில் எந்த கட்சிக்கும், எந்த ஸ்தாபனத்திற்கும் முஸ்லிம் லீக் சளைத்ததல்ல. நேரடியான செயல் அவசியமானால், நமது அனுதாபத்தைக் கிரியாம்சையில் கொண்டுவரும் பணியில், எந்தக் கட்சியோடும் எந்த ஸ்தாபனத்தோடும் ஒன்று சேர்ந்து ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறது" என்று காயிதே ஆஜம் ஜின்னா கூறுகிறார்.

★

### பம்பாயில் வேலை நிறுத்தம்

இந்தோனேஷியாவிலுள்ள பிரிட்டிஷ் துருப்புகளுக்கு ஆயுதங்களை ஏற்றிச் செல்லும் 'டூபா' என்ற கப்பலில், வேலை செய்ய முடியாதென்று 200 இந்திய மாலுமிகள் பாம்பாயில் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள். இந்தியாவும் விழித்தெழுந்துவிட்டது.

இந்த வேலை நிறுத்தத்தைப் பாராட்டி, பண்டித ஜவஹர்லால் நேரு மாலுமிகளின் சங்க காரியதரிசிக்குக் கீழ்க்கண்ட கடிதமெழுதியிருக்கிறார்:—

"பம்பாயிலுள்ள மாலுமிகள், ஜாவாவுக்கு ஆயுதங்களை எடுத்துச் செல்லும் கப்பல்களில் வேலைசெய்ய மறுத்ததைக் கேட்டு சந்தோஷப்படுகிறேன். இதன்பலனாக மூன்று கப்பல்கள் துறைமுகத்தில் சும்மா கிடப்பதும் சந்தோஷகரமான செய்தியே,....... இந்தோனேஷியர்களின் சுதந்திரத்திற்காக, இந்தியத் தொழிலாளர்கள் கிளர்ந்தெழுந்து, ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பிலும், யுத்தத்திலும் பங்கெடுத்துக் கொள்ள மறுப்பார்களாக!!"

## ஒன்றுபட்டு கிளர்ந்தெழுங்கள்!

இந்திய கம்யூனிஸ்டுக் கட்சியின் பொதுக்காரியதரிசி தோழர் பி. ஸி. ஜோஷி சகல தேசபக்தர்களையும் செயலில் இறங்கும்படி அறைகூவி அழைக்கிறார்.

"சுதந்திரப் போராட்டத்திற்கு வெறும் அனுதாபமும் ஆதரவும் காட்டுவதோடு நின்று விடக்கூடாது; பிரிட்டிஷாரின் பிற்போக்குக் கொள்கையைக் கண்டிப்பது மாத்திரம் போதாது.

தென் கிழக்கு ஆசியாவிலுள்ள சுதந்திர இயக்கங்களைத் தாக்க இந்தியாதான் ஒரு முக்கிய தளமாக உபயோகப்படுகிறது. இந்தியத் துறைமுகங்களிலிருந்துதான் துருப்புகளையும், ஆயுத தளவாடங்களையும் ஏற்றிச் செல்லும்கப்பல்கள் செல்லுகின்றன. இந்தியா தனது தேசத்தையும், துறைமுகங்களையும் இத்தகைய நாசகார வேலைக்குப் பயன்படுத்திக் கொள்ளப்படுவதைத் தடுத்தால், ஏகாதிபத்தியங்களைப் பலஹீனப்படுத்தி, சுதந்திர இயக்கங்களின் சக்தியைப் பெருக்கலாம்.

ஆஸ்திரேலியாவிலுள்ள மாலுமிகளும், கப்பல் தொழிலாளர்களும்—இந்தியர்கள், சீனர்கள், இந்தோனேஷியர்கள், ஆஸ்திரேலியர்கள் உள்பட எல்லோரும்—ஏற்கனவே வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

ஆஸ்திரேலியாவின் அடிச்சுவடுகளை இந்தியாவும் பின்பற்ற வேண்டும். நமது நாட்டிலுள்ள தொழிற் சங்கங்களும், பிரதான அரசியல் கட்சிகளும் இந்திய மாலுமிகளையும் தொழிலாளர்களையும் அறைகூவி அழைத்தால், நிச்சயமாக அவர்கள் செவிசாய்க்கத்தான் செய்வார்கள். எனவே, காங்கிரஸ், முஸ்லிம் லீக், அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸ் ஆகிய மகத்தான ஸ்தாபனங்களின் தலைவர்கள், இந்திய மாலுமி ஒருவராவது, இந்தியத் தொழிலாளி ஒருவராவது இந்தோ சைனாவுக்கும், இந்தோனேஷியாவுக்கும் செல்லும் கப்பல்களில் வேலை செய்யக்கூடாதென்று, தேசம் பூராவும் தீவிரமாகப் பிரசாரம் செய்யட்டும்.

இந்த விஷயத்தில் அகில இந்தியா ஒருமுகமாக ஒன்றுதிரண்டு நிற்கிறது. நமது அபிப்பிராய வித்தியாசங்கள், நமது பொது எதிரியோடு போராடும் நமது சகோதர தேசங்களுக்கு உதவி புரியும் பணியில் குறுக்கே நிற்கக்கூடாது."

## இந்தோ-சீனத் தலைவர் தந்தி

இன்றைய இந்தோசைனாவின் தாற்காலிக வியட்நாம் குடியரசின், (இந்தோ-சைனா) தலைவர் ஹோசிமின். இவர் ஒரு தேசிய வாதி. அதன் பிரதம மந்திரி, நியூயன்-ஆய்காச்—இவர் கொரில்லா இயக்கத்தின் தலைவர்களில் ஒருவர். இந்த சர்க்கார், மூன்று பொதுஜன சபைகளின் மூலமாக—கொச்சின் சைனாவில் நாம்-போ, அன்னமில் டிரங்-போ, டொங்கினில் டிரங்-போ-இந்தோசைனாவை ஆட்சி புரிந்து வருகிறது. இவைகளில் பிரசித்திபெற்ற கம்யூனிஸ்டுகளும், தேசிய வாதிகளும் இருக்கிறார்கள். உதாரணமாக, நாம்-போவில் டிரான்-வான்-ஜியான், டொங்-பாச்-நோய், நியூயென்-வான்-டாவ் ஆகியவர்கள் கம்யூனிஸ்டுகள். ஜெயிலில் ஒருகால், வெளியில் ஒருகால் என வாழ்ந்த தியாகிகள். டாக்டர் பாம்-நோ-தாச், ஹியூன்-தீ-ஓன் ஆகிய இருவர்களும் தேசீய வாதிகள்.

வியட் நாம் குடியரசின் தலைவர் ஹோசீ-மின், மார்ஷல் சியாங்-காய்-ஷேக்கிற்கு ஓர் தந்தி அனுப்பியுள்ளார். "பிரிட்டிஷ் ராணுவ தளகர்த்தர் ஜெனரல் கிரேஸியின் தலைமையிலும். பிரஞ்சு ராணுவ தளகர்த்தரான ஜெனரல் லீக்ரேக்கின் தலைமையிலும் உள்ள பிரிட்டிஷ் இந்தியத் துருப்புகள், இந்தோ சைனா தேசீய இயக்கத்தை நசுக்க ஜப்பானியத் துருப்புகளை உபயோகித்து வருவதை வன்மையாகக் கண்டிப்பதாகவும், ஜப்பானியர்களை நிராயுதபாணிகளாக்குகிறோம் என்ற சாக்கை வைத்துக்கொண்டு, இவர்கள் ஜப்பானியத் துருப்புகளை தென் பகுதியில் பல இடங்களில் வைத்திருப்பதாகவும், இவர்களின் உதவியோடு, பிரஞ்சு ஆதிக்கத்தை இந்தோ சைனாமீது திணிக்க முயற்சி செய்து வருவதாகவும்," குறிப்பிடுகிறார்.

"ஜப்பானிய பாஸிஸ்டுகளோடு போராடி நியாயமான ஜனநாயகக் குடியரசை ஸ்தாபித்துள்ள எங்களை இவ்வாறு இழிவு படுத்துவதைக் கண்டு நாங்கள் ஆத்திரமடைகிறோம். எனவே,

(1) அட்லாண்டிக் சாஸனப்படி, ஸான்பிரான்ஸிஸ்கோ சாஸனப்படி நியாயமான உரிமைகளுக்காகப் போராடும் மக்களைக் கொன்று குவிப்பதை நிறுத்தும்படியும்,

(2) வியட்னம் குடியரசின் பரிபூர்ண சுதந்திரத்தை அங்கீகரிக்கும்படியும்,

ஒரு அறிக்கை விடும்படி உங்களை வேண்டிக் கொள்கிறேன்" என்று குறிப்பிட்டுள்ளார்.

—R. H. நாதன்

## இந்தோனேஷியர் வரலாறு

இந்தோனேஷியா, ஹாலந்தைவிட 56 மடங்கு பெரியது. சுமார் 7½ கோடி மக்கள் வசிக்கிறார்கள். இயற்கைச் செல்வம் கொழிக்கும் நாடு. இன்று வெடித்திருக்கும் பிரம்மாண்டமான சுதந்திர எரிமலையை, ஏகாதிபத்தியங்கள் அனைத்தும் ஒன்று சேர்ந்து அணைக்கப் பகீரதப் பிரயத்தனம் செய்து வருகின்றன. அடிமைத் தளைகளை அவிழ்த்துவிட மறுக்கின்றன. ஏன்?

### 50 கோடி பவுன் மூலதனம்

இந்தோனேஷியாவின் இயற்கைச் செல்வத்தை, ஏகாதிபத்தியங்கள் சுரண்டி ருசி கண்டு விட்டார்கள். மொத்த உலக உற்பத்தியில் 90·/. கொயினாவும், 80·/. மிளகும், 75·/. இலவம் பஞ்சும், 37·/. ரப்பரும், 28·/. கொப்பரையும், 18·/. தேயிலையும், 6·/. காபியும், 8·/. பெட்ரோலும்—இந்தோனேஷியாவில் உற்பத்தி செய்யப்படுகின்றன.

ஹாலந்து, பிரான்ஸ், பிரிட்டன், அமெரிக்கா, ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய நாடுகள் மொத்தம் 50கோடிபவு. மூலதனத்தை, இந்தோனேஷியாவில் போட்டிருக்கிறார்கள். ஏகாதிபத்தியங்கள் ஒன்று சேர்ந்து, இந்தோனேஷியாவிலுள்ள சுதந்திர இயக்கத்தை நசுக்கி வருவதன் "ரகசியமும்" இதுதான்.

இந்தோனேஷியாவில், தொழிற்சாலைகள் கிடையாது. மக்களில் சிலர் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள். பெரும்பாலோர், கூலிகளாக ரப்பர் தோட்டங்களிலும், ஈயச் சுரங்கங்களிலும் வேலை செய்கிறார்கள். இயந்திரத் தொழிற்சாலைகளை ஏற்படுத்தி நாட்டின் தொழில் வளத்தைப்பெருக்கி மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்த டச்சு சர்க்கார் யாதொன்றும் செய்யவேயில்லை. மொத்த ஜனத் தொகையில், 92 சதவீதம் கல்வியறிவில்லாதவர்கள்! பிரஜா உரிமையே கிடையாது. கவர்னர் ஜெனரல்தான் சர்வாதிகாரி. பெயரளவில் பொதுஜன சபை (வால்க்ஸ்ராட்) 1915ம் வருடம் ஸ்தாபிக்கப்பட்டது. இதில் 30 ஜாவாக்காரர்களும், 25 டச்சுக்காரர்களும், 5 விதேச ஆசியாக்காரர்களும் (சீனர்களும், அராபியர்களும்) இருந்தனர். 1925ம் வருட சட்டப்படி 20 இந்தோனேஷியர்களும், 15 டச்சுக்காரர்களும், 3 விதேச ஆசியாக்காரர்களும் மறைமுகமாக தேர்ந்தெடுக்கப்பட்டனர். விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலருக்குத்தான் ஓட்டுரிமை உண்டு. ஏனையவர்கள் கவர்னர் ஜெனரலால் நியமிக்கப்பட்டனர். இந்த சபைக்கு அதிகாரமே கிடையாது. வெறும் வாதப் பிரதிவாத சபைதான்.

### தேசீய இயக்கம்

அடிமைத் தளைகளால் தத்தளித்த மக்கள், பஞ்சத்தாலும் பிணியாலும் தவியாய் தவித்த மக்கள் சுதந்திரக் கொடியை 1908ம் வருடத்திலேயே வானளாவ உயர்த்திவிட்டார்கள். மாணவர்களும், தொழிலாளர்களும் சுதந்திர இயக்கத்தின் முன்னணியில் நின்றனர். ஆர்ப்பாட்டங்களும், வேலை நிறுத்தங்களும் நாடெங்கும் நடந்தன.

மகிமை பொருந்திய ரஷ்யப் புரட்சி அடிமை நாட்டு மக்களையும், தொழிலாளர்களையும் உலக முழுதும் தட்டி யெழுப்பிற்று. இந்தோனேஷியாவுக்கு மாத்திரம் விதிவிலக்கா? 1919-ம் வருடம் தொழிற் சங்க காங்கிரஸ் உதயமாயிற்று. ரெயில்வே, டிராம், அச்சாபீஸ், தையல் கடைகள், சர்க்கரை பாக்டரிகள் முதலியனவற்றை வேலை நிறுத்தப் புயல் ஆட்டி அலைத்தது.

1912-ம் வருடம் உருவான சமூக ஜனநாயகக் கட்சி, 1920-ம் வருடம் இந்தோனேஷியா கம்யூனிஸ்டுக் கட்சியாக மலர்ந்தது. 1922-ம் வருடம் எங்கும் வேலை நிறுத்தப் போராட்டம்; சர்க்காரையும், முதலாளிகளையும் ஒரு உலுக்கு உலுக்கிற்று. 1923-ம் வருடம், போக்குவரத்து ஸ்தாபனங்களில், பிரம்மாண்டமான வேலை நிறுத்தம் ஆரம்பமாயிற்று. ஆனால், ஈவிரக்கமின்றி நசுக்கப்பட்டது.

### கம்யூனிஸ்டுக் கட்சியின் செல்வாக்கு பரவுதல்

1924-ம் வருடம், கம்யூனிஸ்டுக் கட்சியில் 31,000 அங்கத்தினர்கள் இருந்தார்கள். 1926-ம் வருடத்தில் 60,000. கம்யூனிஸ்டுக் கட்சியின் செல்வாக்கு காட்டுக் கனல்போல் பரவி வருவதைக் கண்ட சர்க்கார், 1926-ம் வருடம், 13,000 கம்யூனிஸ்டுகளைக் கைதுசெய்தது. நூற்றுக்கணக்கானவர் நாடு கடத்தப்பட்டனர்.

1927-ம் வருடம் இந்தோனேஷியா தேசீயக் கட்சி ஸ்தாபிக்கப்பட்டது. டாக்டர் ஸோகார்னோதான் அதன் முதல் தலைவர். 1929-ம் வருடம் ராஜத்துவேஷக் குற்றம் சாட்டப்பட்டு நான்கு வருட சிறைத் தண்டனையைப் பெற்றார்.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

அமெரிக்காவிலும், பம்பாயிலுமுள்ள கப்பல் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்கிறார்கள்.

பாக்கிஸ்தானை அடைவதும் இவ்விதம் ஒரு கஷ்டமான வேலை என்பதை லீகர்கள் உணரவேண்டும். இந்தோனேஷிய முஸ்லிம்களைப் போல், உலகமக்களின் ஆதரவை—குறிப்பாகக் காங்கிரஸிலுள்ள ஜனநாயக வாதிகளின் ஆதரவை—தங்கள் கோரிக்கைக்காகத் திரட்ட வேண்டும். இதற்கு முதல்படியாக, காங்கிரஸிலுள்ள ஜனநாயக வாதிகளுக்கு ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்திசெய்யக்கூடியவாறு பிரசாரம் செய்யவேண்டும். ஹிந்துக்களையும், ஹிந்துமதத்தையும்தாக்குவதை நிறுத்தவேண்டும்! மத பாஷையில் பேசுவதைவிட்டு ஜனநாயக பாஷையில்—சென்ற வாரம் ஜின்னா பேசியிருக்கும் பாஷையில்—பேசவேண்டும். மற்றவர் கேட்கும் கேள்விகள் பார்ப்பதற்கு முட்டாள்தனமானதாகவும், ஆத்திரமூட்டக் கூடியதாகவும் இருந்தபோதிலும் ஒவ்வொரு வினாடியும் திரும்பத் திரும்பக் கோரிக்கையை விளக்கிக் கூறவேண்டும். இதில் அலுப்பு சலிப்புக் காட்டக்கூடாது! மற்ற மக்களின் தாயகங்களைக் கேட்பதை நிறுத்த வேண்டும்.

### பர்மாவில்

## கவர்னர் சூழ்ச்சி

பர்மா கவர்னர் ஸர் ரெஜினல்ட் டார்மன் ஸ்மித், ஜூன் மாதத்தில் பர்மாவிலுள்ள அரசியல் தலைவர்களைச் சந்தித்து பேசியபொழுது "இடைக்காலத்தில் அமைக்கப் போகும் சர்க்கார். பர்மாவிலுள்ள சகல பிரதான அரசியல் கட்சிகளிலுள்ள தலைவர்களை உட்கொண்ட கூட்டு சர்க்காராக இருக்கும்" என்று கூறினார்.

எனவே, சமீபத்தில், கவர்னரின் நிர்வாக சபைக்கு பர்மிய, பாஸிஸ்டு எதிர்ப்பு பொதுஜன சுதந்திர லீக், அங்கத்தினர்களின் ஜாப்தாவைக் கவர்னருக்குச் சமர்ப்பிப்பது என்று முடிவு செய்தது.

ஏனெனில், லஞ்சத்தையும் ஊழல்களையும், கள்ள மார்க்கட்டையும் அறவே அகற்றவும், பிரஜா உரிமைகளைப் பெறவும், ஜனநாயக அரசியல் நிர்ணய சபையை நிர்மாணிக்கவும் கவர்னரின் நிர்வாக சபையில் பிரவேசிப்பதன் மூலமாக, மக்களை ஒன்றுதிரட்டி, போராட உதவிபுரியுமென்று கருதினார்கள்.

ஆனால், சமீபத்தில் கவர்னர் தன்னுடைய சுய சொரூபத்தைக் காட்டிவிட்டார். பாஸிஸ்டு எதிர்ப்பு பொதுஜன சுதந்திர லீக் சமர்ப்பித்த ஜாப்தாவை அங்கீகரிக்க முடியாதென்றும், நிர்வாக சபை அங்கத்தினர்களை தாமே நியமிக்கும் உரிமையை விட்டுக்கொடுக்க முடியாதென்றும், அன்னிய நாட்டு விவகாரம், உள்நாட்டு விவகாரம், பொருளாதாரம், பாதுகாப்பு ஆகிய நான்கு இலாக்காக்களுக்கு, அரசியல் கட்சிகளில் இல்லாத நபர்களைத்தான் பொறுக்கியெடுக்க முடியுமென்றும், பாஸிஸ்டு எதிர்ப்பு பொதுஜன சுதந்திர லீகிலிருந்து ஏழு பேர்களை மாத்திரமே, நிர்வாக சபையில் சேர்த்துக் கொள்ள முடியும் என்றும் கூறிவிட்டார். எனவே, பாஸிஸ்டு எதிர்ப்பு பொதுஜன சுதந்திர லீக் நிர்வாக சபையில் ஒத்துழைக்க மறுத்துவிட்டது.

இவ்வாறு, தன்னுடைய கையாட்களை நிர்வாக சபையில் உபயோகித்துக்கொண்டு, பழைய உளுத்துப்போன யதேச்சாதிகாரத்தை பர்மியர்மீது திணிக்க சூழ்ச்சி செய்கிறார் ஸர் டார்மன் ஸ்மித்.

ஆனால், இது ஆச்சரியகரமான விஷயமல்ல. பர்மாவுக்குள் நுழைந்ததிலிருந்து பிரிட்டன், இத்தகைய பிற்போக்கு முறைகளைத்தான் கையாண்டு வருகிறது. பொதுஜன இயக்கத்தை நசுக்குவதன் மூலமாக, முன்போல், மக்களைச் சுரண்டி கொள்ளை லாபமடிக்கலாம் என்று கனவு காண்கிறார்கள். ஆனால், இன்றுகாலம் மாறிவிட்டது. பர்மிய மக்கள் ஒன்றுசேர்ந்து, ஏகாதிபத்தியச் சூழ்ச்சியைச் சிதறடிப்பார்களென்பது திண்ணம்.

# ஏகாதிபத்யம் பாகிஸ்தானை தராது

## மதபாஷையால் சந்தேகங்கள் தீராது!

*தர்ஆனைக்கொண்டும், மதத்தைக்கொண்டும் இதுவரை பாக்கிஸ்தான் லட்சியத்தை லீகர்கள் விளக்கிவந்தனர். இருபதாம் நூற்றாண்டிலே உலகெங்கும் ஜனநாயகத்திற்காகப் போராட்டம் நடக்கும் இக்காலத்திலே, அதை எல்லோராலும் புரிந்துகொள்ள முடியவில்லை. இன்று ஜின்னா எல்லோருக்கும் புரிகிற முறையில் அதை விளக்கி இருக்கிறார். லீக் பிரசாரகர்களும் சரி, ஜனநாயக காங்கிரஸ்வாதிகளும் சரி இதை தெளிவாக உணரவேண்டும்.*

பாக்கிஸ்தான் கோரிக்கையில் அநேகருக்கு உண்மையான சந்தேகங்கள் பல தோன்றுகின்றன. கடந்த 25 வருடங்களாகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து காங்கிரஸ்காரர்கள் போராடி வருகிறார்கள். ஜனநாயகம், சுதந்திரம் என்ற ஸ்லோகங்களினாலே உணர்ச்சி பெற்று வந்திருக்கிறார்கள். "எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் ஓர் விலை, எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்ற கீதத்தைக் குடித்து வளர்ந்துவந்திருக்கிறார்கள். ஏகாதிபத்தியத்தின் கொடிய அடக்கு முறைகளுக்கு ஆளானவர் எத்தனையோ பேர்! வாழ்நாள் பூராவும் தியாகத்திலேயே கழித்தவர்கள் எத்தனையோ பேர்! இந்தத் தியாகிகளுக்கு, ஜனநாயகவாதிகளுக்கு, உண்மை தேசபக்தர்களுக்கு முஸ்லிம்களை அடக்கிஒடுக்கவேண்டுமென்று கடுகளவு எண்ணமும் கிடையாது. ஒரு ஹிந்துவின் சுதந்திரத்திற்காக எப்படி போராடுவார்களோ, அதே போல் ஒரு முஸ்லிமுடைய உரிமைக்காகவும், நீக்ரோவின் உரிமைக்காகவும், சீனனின் உரிமைக்காகவும் இவர்கள் போராடுவார்கள். ஆனால் அந்த உரிமை, கோரிக்கை நியாயமானது என்று அவர்கள் மனதிற்குப்படவேண்டும்.

### உண்மையான சந்தேகங்கள்

அத்தகையவர்களில் அநேகருக்குப் பாக்கிஸ்தானைப்பற்றி பல சந்தேகங்கள் தோன்றி இருக்கின்றன. அவர்கள் தியாகம் செய்த நாட்களிலெல்லாம், முஸ்லிம் மக்களின் சுதந்திரத்தைப்பற்றி கவலைப்படாமலிருந்த ஸ்தாபனம், இன்று "பாக்கிஸ்தான்" கேட்கிறது. இதை அவர்களால் புரிந்துகொள்ளமுடியவில்லை. இந்தக் கோரிக்கை எப்படி முஸ்லிம்களுக்கு ஜனநாயகத்தையும் சுதந்திரத்தையும் அளிக்கிறதென்றுபுரியவில்லை. தங்களைப்போல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கொடிய அடக்குமுறைகளுக்கெல்லாம் உட்படாத ஒரு தலைமைப் பதவி, இப்பொழுது எப்படி திடீரென்று சுதந்திரத்திற்காகப் போராடும் ஒரு தலைமைப் பதவியாக மாறிவிடக்கூடும் என்று புரியவில்லை. அது உண்மையில் ஜனநாயகக் கோரிக்கையா அல்லது ஏகாதிபத்திய சூழ்ச்சிகளில் ஒன்றா என்று சந்தேகப் படுகின்றனர்.

இந்த சந்தேகங்களைப் போக்குவது லீகர்களின் கடமை. அந்த தேசபக்தர்களின், ஜனநாயகவாதிகளின், சுதந்திரப் போர்வீரர்களின் ஆதரவைத் தங்களுடைய சுதந்திரக் கோரிக்கைக்காகத் திரட்டுவது லீகர்கள் கடமை.

### லீகர்கள் பிரசார முறை

ஆனால் லீகர்கள் இந்தக் கடமையைச் சரிவரச் செய்வதில்லை. அவர்களுடைய பிரச்சார முறை அந்த சந்தேகங்களை அதிகப்படுத்துவதாக இருக்கின்றனவே யொழிய குறைப்பதாக இல்லை. மற்றவர்களுடைய ஆதரவு இல்லாமலே பாக்கிஸ்தான் கிடைத்துவிடும் என்று பலர் நினைக்கிறார்கள்! "ஹிந்துக்களுடைய ஆதரவு நமக்கு ஏன்? பிரிட்டிஷாரிடமிருந்து நாமே நேரடியாக வாங்கிக்கலாம்!" என்று சிலர் கூறுகிறார்கள். இதனால் ஹிந்துக்களைத் திட்டுவதில், அவர்களுவடய மதத்தைப் பரிகசிப்பதில் போய் முடிகிறது அவர்களுடையப் பிரசாரம்! "பாக்கிஸ்தான் என்றால் மதத்தை அடிப்படையாகக் கொண்ட ஆட்சி" என்ற சந்தேகத்தை ஜனநாயக வாதிகளிடையே வளர்க்கிறார்கள்.

"மத ஆட்சி அல்ல" என்று கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் விளக்கிக் கூறும்போது காங்கிரஸிலுள்ள ஜனநாயக வாதிகள் ஆச்சரியமடைகின்றனர். "பாக்கிஸ்தான் கோரிக்கையில் இவ்வளவு நியாயம் இருக்கிறதா? பின்னே ஏன் லீகர்கள் அவ்விதம் சொல்லமாட்டேனென்கிறார்கள்?" என்று கேட்கிறார்கள். "நீங்கள் சொல்லுவதுபோல், ஜனநாயக சுதந்திரமாக பாக்கிஸ்தான் இருக்குமேயானால், எங்களுக்கு ஆக்ஷேபணை இல்லை!" என்று பலர் சொல்கிறார்கள்.

* * *

### நியாயத்தைஎதிர்க்கமுடியவில்லை

சாதாரணமாக ஜின்னா பேசுகிறார் என்றால், பாக்கிஸ்தானை விளக்கி மிகக் குறைவாகவே பேசுகிறார். காங்கிரஸ் தலைமைப் பதவியையும், ஹிந்துக்களையும் தாக்குவதிலேயே பிரசங்கத்தில் பெரும் பகுதியை செலவழிக்கிறார். ஆனால் கடந்த 8ந்தேதி அ. பி. நிருபருக்கு அளித்தப் பேட்டியில், இந்தப் பழக்கத்தை மூட்டைக் கட்டிவைத்துவிட்டு, எல்லோருக்கும் புரியக்

**இஸ்மத் பாஷா**

கூடிய வகையில் பாக்கிஸ்தானை விளக்கி இருக்கிறார். இதைப் படித்தக் காங்கிரஸ்காரர்களில் பலர் ஆச்சரியமடைந்திருக்கிறார்கள்.

அவர் கூறுகிறார்:

- பாக்கிஸ்தான் ஒரு ஜனநாயக சர்க்காராக இருக்கும்.
- பிரதான தொழிற் சாலைகளும், போக்குவரத்து சாதனங்களைப் போன்ற பொது ஜனங்களுக்கு அத்தியாவசியமான தொழில்களும் தேசத்திற்குப் பொது சொத்தாக இருக்கும்,
- பாக்கிஸ்தானில் சேர்ந்திருக்கும் உறுப்புகளுக்கு—அதாவது சிந்து எல்லைப்புறம், காஷ்மீர் போன்ற மாகாணங்களுக்கு— சுயாட்சி யுண்டு.
- பாக்கிஸ்தான் பொருளாதார துறையில் மிகவும் வலுவுள்ள நாடாக இருக்கும். தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய மூலப் பொருள்கள் ஏராளமாக இருக்கின்றன.
- பாக்கிஸ்தானில் ஜாதிமத வித்தியாசம் பாராட்டப்படாது. மனிதர்களெல்லோரும் சமம் என்ற கொள்கையில் முஸ்லிம்கள் நடந்துகொள்வார்கள்.
- ஒரே ஒரு கட்சியின் ஆட்சி பாக்கிஸ்தானில் நடக்காது. அதிகாரத்திலிருக்கும் கட்சியின் தவறுகளை எடுத்துக்காட்டித் திருத்துவதற்கு எதிர் கட்சிகள் அவசியம்.

இந்த வியாக்யானத்தை யாராலும் எதிர்க்க முடியவில்லை. அநியாயமான உரிமைகள் என்று சொல்ல யாரும் முன்வரவில்லை. ஏனெனில் இது ஜனநாயகம். மதம் அல்ல! ஆயிரம் வருடங்களுக்கு முன்பு வகுக்கப்பட்ட பிற்போக்கு அரசியல் அல்ல! கமால்பாஷா உதறித் தள்ளிய ஆட்சியை ஒத்ததல்ல; தற்காலத்தில் ஜனங்கள் விரும்பும் ஜனநாயக ஆட்சி!

ஒரு பானை பாலில் ஒரு சொட்டு விஷம் கலந்தால் போதும்! பானைப் பாலும் விஷமாகி விடுகிறது. இவ்வளவு தூரம் நியாயமான கோரிக்கையில் ஒரு அநியாயமான கோரிக்கையை சேர்த்து விடுகிறார் ஜின்னா. நியாயத்தையே இது மறைத்து விடுகிறது. ஹிந்து மகா சபைக்காரர்களும், காங்கிரஸிலேயே உள்ள ஹிந்து மகாசபைக் காரர்களும் இதைப் பிடித்துக் கொள்கிறார்கள். லீகை எதிர்க்க இது ஒன்றைத்தான் பிரதானமான ஆயுதமாக உபயோகித்து மக்கள் மனதை குழப்புகிறார்கள்.

ஹிந்துக்கள் அதிகமாக வசிக்கிற, ஹிந்துக்களுடைய தாயகமாக இருக்கிற மேற்கு வங்காளமும், கிழக்கு அஸ்ஸாமும், தென்கிழக்கு பஞ்சாபும், சீக்கியர்கள் தாயகமாக இருக்கிற கிழக்கு பஞ்சாபும் பாக்கிஸ்தானுக்கு வேண்டுமென்கிறார். இது அநியாயம் மட்டுமல்ல; லீகின் பாக்கிஸ்தான் கோரிக்கைக்கே முரண்பட்டது!

இந்தியா முழுவதையும் எடுத்துக் கொண்டால், "முஸ்லிம்கள் மெஜாரிட்டியாக இருக்கும் பிரதேசங்களிலும்கூட ஹிந்து மெஜாரிட்டி ஆட்சி தான் நடக்கும்" என்று பயப்படுவதனாலேதானே, லீக் பாக்கிஸ்தான் கேட்கிறது? மற்றொரு வகுப்பினரின் மெஜாரிட்டி ஆட்சிக்குக் கட்டுப்படாமல் இருப்பதைத் தன் உரிமையென்று — நியாயமான உரிமை என்று—லீக் கருதுகிறது. இதே உரிமையை மற்றவர்களுக்கு எப்படி மறுக்க முடியும்? வங்காளம் முழுவதும் வேண்டுமென்று கேட்பதற்கு என்ன அர்த்தம்? இன்றைக்கு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் வகுத்திருக்கும் எல்லைக் கோடுகளுக்குள் முஸ்லிம்கள் பெரும்பான்மையினராக இருக்கிறார்கள். ஆனால் உண்மையில் முஸ்லிம் தாயகத்தை மட்டும் தனியாகப் பிரிப்பதென்றால் கிழக்கு வங்காளமும் மேற்கு அஸ்ஸாமும்தான் இந்தக் கோட்டிற்குள் வரும். இதை ஒப்புக்கொள்ளாமல் மற்ற மக்கள் பெரும்பான்மையினராக வாழும் பிரதேசங்களையும் பாக்கிஸ்தானுக்கு வேண்டுமென்று கேட்பது அநியாயம். மற்ற மக்களை அவர்களுடைய தாயகத்திலேயே வேறு வகுப்பாரின் மெஜாரிட்டி ஆட்சியின்கீழ் என்றென்றைக்கும் அடக்கிவைப்பதாகும். பஞ்சாபிலும் இதே நிலைமை.

நியாயமான பாக்கிஸ்தான் கோரிக்கையில்—ஜனநாயகவாதி ஒவ்வொருவனும் ஒப்புக்கொள்ளக் கூடிய கோரிக்கையில்—இந்த அநியாயமானதைச் சேர்த்து அனாவசியமான எதிர்ப்பை லீக் தேடிக்கொள்கிறது.

இதை லீகர்கள் கைவிடுவார்கள் என்று தோன்றவில்லை. ஏனெனில் பாக்கிஸ்தான் என்பது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் கொடுத்துக் கிடைக்கக்கூடிய வஸ்துவாக நினைக்கிறார்கள். காங்கிரசுடனும், கம்யூனிஸ்டுகளுடனும், சீக்கியர்களுடனும், ஹிந்துக்களுடனும் சேர்ந்து தோளோடு தோள் நின்று போராடி அடையக்கூடிய சுதந்திரமாக அவர்களுக்குப்படவில்லை!

ஜின்னாவின் பேச்சு இந்த மனோபாவத்தைத்தான் பிரதிபலிக்கிறது. எப்பொழுது பாக்கிஸ்தான் ஸ்தாபிக்கப்படும் என்று அ. பி. நிருபர் கேட்டார். தேர்தலில் லீக்தான் முஸ்லிம்களுடைய பிரதிநிதி ஸ்தாபனம் என்று நிரூபிக்கப்பட்ட பிறகு, காத்திருந்து பார்க்கவேண்டும் இந்தியாவில் இரண்டு அல்லது அதற்கு அதிகமான அரசாங்கங்களுக்கு சுதந்திரம் தருவதாக பிரிட்டிஷ் சர்க்கார் சொல்லி இருக்கிறது. என்று ஜின்னா கூறினார்.

இதே ஜின்னா, அதே தினத்தில் பாலஸ்தீன் பிரச்சினையைப்பற்றி ஒரு பொதுக்கூட்டத்தில் பேசினார். அப்போது, "வாக்குறுதிகளைக் கொடுப்பதிலும், அவ் வாக்குறுதிகளை நிறைவேற்றுவதில் சுணக்கற்ற முட்டுக்கட்டைகளைப் போடுவதிலும் பிரிட்டிஷார் நிபுணர்கள்" என்று கூறினார். பாலஸ்தீன் அரேபியர்களுக்கு பிரிட்டிஷார் கொடுத்த வாக்குறுதிகளையும், அவற்றைக் காற்றில் பறக்கவிட்டதையும் வர்ணித்தார்.

எந்த ஏகாதிபத்தியத்தை நம்பக்கூடாது என்கிறாரோ. அதே ஏகாதிபத்தியம் பாக்கிஸ்தானை—முஸ்லீம் சுதந்திரத்தைக்—கொடுத்து விடும் என்று நம்புகிறார்!

நாங்கள் கம்யூனிஸ்டுகள். நிச்சயமாகக் கூறுகிறோம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் யாருக்கும் சுதந்திரத்தைக் கொடுத்ததில்லை; பாக்கிஸ்தானைக் கொடுக்காது; பாக்கிஸ்தான் என்று சொல்லி எதையாவது அது கொடுக்குமானால், அது உண்மையான சுதந்திர பாக்கிஸ்தானாக இருக்காது. தன்னுடைய ஆதிக்கத்தைப் புதிய உருவத்தில் முஸ்லிம் மக்கள் மீது திணிக்கக் கூடியதாகவே இருக்கும்.

இந்தோனேஷியாவில் பிரிட்டிஷ், டச்சு ஏகாதிபத்தியங்களை எதிர்த்துப் போராடும் மக்களில் முக்கால் வாசி பேருக்குமேல் முஸ்லிம்கள்! சுதந்திரத்தை அடைய—பாக்கிஸ்தான் லக்ஷியத்தை அடைய—அவர்கள் படும் கஷ்டத்தைக் கண்டு லீகர்கள் பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். தங்களைத் தாங்களே ஒன்று திரட்டிக்கொள்வதோடு அவர்கள் நின்று விடவில்லை. உலகிலுள்ள மக்கள் அவ்வளவு பேருடைய ஆதரவையும், உதவியையும் தங்களுக்கு பக்கபலமாகத் திரட்டுகிறார்கள். தங்களுடைய போர் எவ்வளவு நியாயமானது என்பதையும், தங்களுடைய சர்க்கார் எவ்விதம் ஜனநாயக சர்க்கார் என்பதையும் தினசரி உலக மக்களுக்கு ஒலிப்பரப்புகிறார்கள். அந்த நியாயத்தை உணரும் உலக ஜனநாயக வாதிகள் அவர்களுக்கு ஆதரவாக ஓடி வருகிறார்கள். ஆஸ்திரேலியாவிலும்,

(11-ம் பக்கம் பார்க்க)

# ஹிந்துமகா சபையுடன் கூட்டுறவு

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

மானது" என்று அத்தீர்மானம் கூறுகிறது.

### கம்யூனிஸ்ட் எதிர்ப்பின் விளைவு

லீக் எதிர்ப்பின் விளைவு இது. கம்யூனிஸ்ட் எதிர்ப்பின் விளைவைப் பார்ப்போம்.

"ஜமீன்தாரி முறையை ஒழிக்க வேண்டும்; பிரதான தொழில்களை அரசாங்கத்துக்கு சொந்த மாக்க வேண்டும்" என்கிறார் நேரு. (ஹிந்து 14-11-45)

"சமூகத்துக்கு விரோதமான வர்க்க நலன்களை எதிர்த்துப் போரிட"ப் போவதாக காங்கிரஸ் தேர்தல் பிரகடனம் முரசு கொட்டுகிறது. ஆனால் நடைமுறையில் நிகழ்வதென்ன?

தமிழ்நாட்டில், தொழிலாளிகளை காட்டுமிராண்டித்தனமான முறையில் சுரண்டுவதில் பெயர்போன மில் முதலாளி ஸ்ரீ வெள்ளிங்கிரி கவுண்டர் மத்ய சட்டசபைக்கு காங்கிரஸ் பிரதிநிதியாகப் போகிறார்! மதுரையில், 'தந்தி' ஆதித்தன் காங்கிரஸ் தலைவர்களின் சகாவாக நிற்கிறார். 1938ல் காங்கிரஸால் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு விலக்கப்பட்ட ஸ்ரீ கோபாலரத்தினத்துடன் சேர்ந்து 1942ல் தமிழ் ராஜ்ய கட்சி என்ற காற்றாடியை பறக்கவிட்டார் தந்தி முதலாளி ஆதித்தன். காற்றாடி பறந்தே போய் விட்டது. பிரிஸ்கோ மகாநாட்டை அடிமை இந்தியாவின் பிரதிநிதியாக அலங்கரித்த ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியாரின் தயவில், பத்திரிகை கோட்டா கிடைக்கவே, தந்தியை மதுரையில் ஆரம்பித்து நடத்துகிறார். கம்யூனிஸ்டு எதிர்ப்பு அவதூறுகளை பிரசாரம் செய்வதும், விடுதலையான காங்கிரஸ் தலைவர்களுக்கு டீப்பார்ட்டி கொடுப்பதும் தான் அவர் யோக்கியதாம்சங்கள். இதற்கு பரிசாக, ஸ்ரீ காமராஜ் நாடார் தந்தி ஆதித்தன் சகோதரருக்கு மத்திய சட்டசபை காங்கிரஸ் டிக்கட் அளித்தார். தந்தி ஆதித்தனுக்கே மாகாண சட்டசபை டிக்கட் அளிப்பதாக வாக்களித்திருக்கிறாராம்!

### மகாராஜாக்களுடன் சேர்க்கை

ஆந்திர தேசத்தில், பித்தாபுரம் யுவராஜாவும், யுவராணியும் காங்கிரஸில் சேர்கிறார்கள். பித்தாபுரம் மகாராஜாவை—1937 தேர்தலில் பீப்பிள்ஸ் பார்ட்டி அமைத்து, பணத்தை தண்ணீராக பாவித்து வாரி இறைத்து காங்கிரஸுடன் போட்டியிட்ட பித்தாபுரம் மகாராஜாவை-டாக்டர் பட்டாபி சீதாராமையா காங்கிரஸுக்குள் வரும்படி வருந்தியழைக்கிறார். ('தேசபக்தன் டைரி'யைப் படியுங்கள்) ஜஸ்டிஸ் கட்சி தலைவராயிருந்த சல்லபள்ளி ராஜா, விவசாயிகளை ஈவிரக்கமின்றி அடக்கி ஒடுக்குவதில் பெயர் போன பிரமுகர் — காங்கிரஸின் போஷகராக விளங்குகிறார் கடப்பா ஜில்லா ஜஸ்டிஸ் கட்சி காங்கிரஸுடன் ஐக்கியமாகி விட்டது!

ஐக்கிய மாகாண நிலச்சுவான்தார் தொகுதியில், காங்கிரஸ் தன் அபேட்சகரை வாபஸ் வாங்கி விட்டது. போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்ட ஜமீன்தார் ஸர் விஜயா எல்லாவற்றிலும் காங்கிரஸை ஆதரிப்பாராம்! ஒரே ஒரு விதி விலக்குதானும்! "நிலப் பிரபுக்களின் நலன்களை" விட்டுக் கொடுக்க மாட்டாராம்!

காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர் கோவிந்த வல்லப பந்த் பதம்பாட் சிங்கேனியா, ராம்ரதன் குப்தா கூட்டத்துடன் சேருகிறார். (தேர்தல் மஸாலாவைப் படியுங்கள்)

நேருவின் அயோத்தி மாகாண ஜமீன்தார்களும் காங்கிரஸுடன் ஒட்டிக் கொள்கின்றனர்.

பாஞ்சாலத்தில், மிகப் பெரிய பாங்கர்களான லாலா யோத்ராஜ், கோலி முதலியோருக்கு மாகாண சட்டசபைக்கு காங்கிரஸ் டிக்கட்கள் தருவதாக வாக்கு கொடுக்கப்பட்டிருக்கிறதாம்!

பீகார் ஜமீன்தார்கள் காங்கிரஸை ஆதரிப்பதாக உறுதிமொழி கூறி விட்டார்களென்று பீகார் காங்கிரஸ் பத்திரிகை ஸெர்ச்லைட் மகிழ்ச்சியுடன் பிரசுரிக்கிறது!

வரிசையாக சொல்லிக்கொண்டே போகலாம்.

### வித்தியாசம்

1937-ல் நடந்த தேர்தல் போராட்டத்துக்கும் இதற்கு முள்ள வித்தியாசத்தைப் பார்க்குமாறு ஒவ்வொரு நேர்மையான தேச பக்தனையும் கேட்டுக் கொள்கிறோம். இதே ஜமீன்தார்களும், கொள்ளை லாபக் கூட்டமும், அன்று கடைசி மூச்சு உள்ளவரை காங்கிரஸை எதிர்த்துப் போராடியது. இன்று காங்கிரஸின் கம்யூனிஸ்டு எதிர்ப்புத் திட்டம் இவர்களை காங்கிரஸுக்குள் ஆகர்ஷிக்கிறது! கம்யூனிஸ்டு எதிர்ப்பால் கண்ணிழந்த காங்கிரஸ் தலைவர்கள் இவர்களுடன் கூடிக் குலாவும் காட்சியைப் பார்க்கிறோம். கொள்ளை லாபக் கூட்டத்தின் பணத்தையும், ஜமீன்தார்களின் ஆதரவையும் கொண்டா காங்கிரஸ் ஜமீன்தாரி முறையை ஒழிக்கப் போகிறது? கொள்ளை லாபக் கூட்டத்தை அடக்கப் போகிறது?

### விசித்திரம்

விசித்திர மென்னவென்றால், இந்த சூழ்நிலையில் பேசும் பண்டித நேரு "கம்யூனிஸ்டுகள் பிற்போக்கு சக்திகளுடன் சேர்ந்து விட்டார்கள்" என்று டெல்லி கூட்டத்தில் பேசுகிறார்! வார்த்தைகளுக்கு அர்த்தமிருக்க வேண்டாமா?

### லீக் தலைமையில்

காங்கிரஸ் தலைவர்கள் சிங்கேனியாவிடம் போனால், லீக் தலைமை பிரோஸ்கான் நூன்களுக்கு மாலை போட்டு வரவேற்கிறது! அதே காரணம்தான்; எப்படியாவது சகோதர ஸ்தாபனத்தை எதிர்த்து ஜெயிக்க வேண்டும்!!

காங்கிரஸ் ஹிந்து வகுப்புகளுடன் சேர்ந்தால், லீகில் வகுப்புவாதப் பிரசாரம் வளர்கிறது. ஒற்றுமை விரும்பும் லீகர்கள் வாயடைபடுகிறது.

"காங்கிரஸ் மந்திரி சபைகள் செய்த அட்டூழியங்கள், அக்கிரமங்கள்பற்றி" அகில இந்திய லீகின் தினசரி 'டான்' "அது மீண்டும் நடக்கவிடக்கூடாது" என்ற தலைப்பில் கட்டுரைகளை தொடர்ச்சியாய் வெளியிடுகிறது! காங்கிரஸ் எதிர்ப்பு, ஹிந்து எதிர்ப்பு விஷத்தைக் கக்குகிறது!

"ஆஸாத் உடனே காங்கிரஸிலிருந்து விலகாவிட்டால், அவரை முஸ்லிம்கள் மதத்துரோகி என்றே கருதுவார்கள்" என்று கூறுகிறது மீரட் முஸ்லிம் மாணவர் சம்மேளனத்தின் தீர்மானம்!

தாபம் தலைக்கேறுகிறது. தப்பபிப்பிராயங்கள் கண்களை மறைக்கின்றன. ஜனநாயக விவாதங்களுக்குப் பொறுமையில்லை. சகோதரனை புரிந்துகொள்ளும் மனப்பான்மைக்கு இடமில்லை. தேசீய முஸ்லிம் கூட்டங்களை லீகர்கள் தாக்குவதும், கம்யூனிஸ்டு கூட்டங்களில் காங்கிரஸ்வாதிகள் கலாட்டா செய்வதும் சகஜமாகிவிட்டது.

இந்த சீரழிவு நீடித்தால், ஒருவரை யொருவர் மண்டையை உடைத்துக்கொள்ளும் நிலைமைதான் ஏற்படும். பிரிட்டிஷ் 'சட்டாம்பிள்ளைக்கு' கொண்டாட்டம். 'சூரியன் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் ஒருநாளும் அஸ்தமிக்கமாட்டான்! ஹா! ஹா! ஹா!" என்று சிரித்துக் கூத்தாடுவார்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகள்!

Edited, Printed and Published by P. RAMAMURTHI at the "Janasakthi" Press, 1/6, Davidson Street, G. T. Madras. Regd. No. M. 4514